

*அங்கண் ஞாலமஞ்ச அங்கோராளரியாய் அவுணன்*
*பொங்கவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்*
*பைங்கணானைக் கொம்புகொண்டு பத்திமையால் அடிக்கிழ்ச்*
*செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றமே*

(*பெரியதிருமொழி* 1-7-1)

*'நீ சொல்லுகிற விஷ்ணு இங்கில்லை' என்று இரணியன் சபதஞ்செய்த அவ்விடத்திலே, அழகியதாம் விசாலமான பூமியிலுள்ள எல்லோரும் பயப்படும்படியாக, ஒப்பற்ற நரசிம்ம ரூபனாய் மாதவன் தோன்ற, அதனைக்கண்டு இரண்யன் பிரமித்த நிலையில், அவனது உடலைத் தன் கூர்மையான நகங்களால் இரு பகுதிகளாகப் பிளந்த அந்த பரமபதநாதன் எழுந்தருளியிருக்கும் இடம் எதுவென்றால், கோபத்தால் சிவந்த கண்களை உடைய சிங்கங்களானவை பசுமையான கண்களையுடைய யானைகளின் தந்தங்களைக் கொணர்ந்து, பக்தியினாலே இறைவனுடைய திருவடிகளிலே சமர்ப்பித்து வழிபடுகின்ற சிங்கவேள் குன்றமாம்.*

# ஸப்தகிரி

மே - 1994


தனிப்பிரதி ரூ. 2 — மலர் 24

வருடச்சந்தா ரூ. 24 — இதழ் 12

சிறப்பாசிரியர் :

திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீதாள்ளபாக்க அன்னமாச்சார்யா.
வண்ணச் சித்திரம்: கே. ஜெகதீஷ்.

பின்னட்டை : திருமலைப் பூந்தோட்டம்.

முதல் உள்ளட்டை : ஸ்ரீகோவிந்தராஜசுவாமி கோயில் திருத்தேர்- திருப்பதி.

2வது உள்ளட்டை : திருப்பதி கங்கையம்மன் திருவிழாவின் போது.

JAGADISH

## உங்களுடன்...

குகைகளிலும் மரங்களிலும் வாழ்ந்த அக்கால மனிதன் தன் எண்ணங்களை மற்றவர்க்குப் புரிய வைக்க முயற்சித்தபோது, அதனை சைகைகளாலும், குறியீடுகளாலும் வெளிக்காட்டினான். அதே சமயத்து தொலைவில் இருக்கும் மனிதர்க்குத் தன் எண்ணங்களை பலவகையாக ஒலியெழுப்பித் தெரிவித்தான். ஒலிகளில் அடங்கிய உணர்ச்சிகளுக்கேற்றவாறு, செய்திகள் பரிமாறப்பட்டன. மனிதனின் நாகரீக - அறிவு மேம்பாட்டின் விளைவாக ஒலிக்கு உருவம் கொடுக்க எத்தனித்தபோது மொழி தோன்றியது. மொழியின் சிறப்பு இலக்கியத்திற்கு வழிகாட்டியது. மொழியின் பயனாக ஒலியும், அசைவுகளும் நெறிபடுத்தப்பட்டன. இந்நிலையில் இசையின் பெருமை உணர்த்தப்பட்டது. அவ் இசைக்கு பாவம், லயம், ராகம் போன்றன உறுதுணையாகி இசை புனிதமாக்கப்பட்டது. அந்தப்புனித இசையே இறைவனைப் புகழ, அவனருள் பெற்றிட ஒரு எளிமையான வழிமுறையாகத் தென்பட்டது. இதுபோது இலக்கியம், இசை சமயம், ஆகியன இணைந்து தங்கள் வளர்ச்சிக்கு தாங்களே வழிவகுத்துக் கொண்டன. இவற்றுள் மொழியை ஒரு கருவியாகக் கொண்டு இசையானது சமயத்தின் பெருமையை, ஆற்றலை நன்கு உணர்த்தியது. இதனையே பக்தி மார்க்கத்திற்கு ஒரு எளிய, விரைவான வழியாக நமது சமயச் சான்றோர்கள் மேற்கொண்டனர். இதனால் நாயன்மார்களும், ஆழ்வார்களும், மற்றைய மெய்யடியார்களும் இறைவன் மீது பல பக்திப் பாக்களை, பாசுரங்களை இயற்றித் திருவருள் பெற்றனர். மற்றவரும் பயன்பெற உயர்வழி காட்டினர்.

"நாரதா! வைகுண்டத்திலோ, முனிவர்களின் இதயத்திலோ நான் இருப்பதில்லை. எங்கு என் பக்தர்கள் இசை கொண்டு என்னை வழிபடுகிறார்களோ அங்கு நான் இருப்பேன்" என்பது திருமாலின் திருவாக்கு. "பரமனின் அருள்வெளிப்பாடு இசையேயாகும்" என்பது ஆதிசங்கரரின் அருள்வாக்கு. தவத்தாலும், வேள்விகளாலும், சடங்குகளாலும் இறைவனை அடைய மற்றைய யுக தர்மங்கள் வழிகாட்டிட, கலியுகத்தில் இறைவனின் திருநாம புகழ் அழைப்பால் மட்டுமே அவ் இறைவனின் திருவருளை பெற்றிடமுடியும் என்று சாத்திரங்கள் அறுதியிடுகின்றன. "அழுதால் அவனைப் பெறலாமே" என்பர் ஆன்றோர். இங்கு அழுதல் என்பது பாடுதல் ஆகும். யாரைப் பாடவேண்டும்? அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கோவிந்தனைப் பாடவேண்டும். எவ்வாறு பாடவேண்டும்? கல்லும் கரையும் வண்ணம் அழுதுபாட வேண்டும். எதனைக் கொண்டு பாடவேண்டும்? அவ்எண்குணத்தானின் பெருமை பேசும் விஷயங்களைக் கொண்டு பாடவேண்டும். குழந்தை அழுதால் அது அதன் பசியின் எதிரொலி. பெரியோர் அழுதால் அது அவர்களின் சோகத்தின் எதிரொலி. பக்தன் அழுதால் அது பக்தியின் வெளிப்பாடு. அப்பக்தியில் இசை, மொழி, உணர்ச்சி ஆகியவை கலந்திருக்கும். அக்கலவையின் பெருமைக்கேற்ப, சிறப்பிற்கேற்ப, ஆற்றலுக்கேற்ப பக்தன் தன்னை மறக்கின்றான். பிறரை மயக்குகின்றான். அந்த மறத்தலிலும், மயக்கத்திலும் இறைவனை அனுபவிப்பதே இசையின் - பக்தியின் - அடிப்படை வெற்றியாகும்.

"நாதோபாஸந ஜேஸே சங்கர நாராயண விதுல வெலஸிதி ஓ மனஸா" என்று இசை கொண்டு இறைவனைப்பாடி திருவருள் பெறலாம் என்று ஸ்ரீதியாகராஜர் நமக்கு உறுதி கூறுகின்றார். "ஐயனே, அரனே யென்று அரற்றினால் உய்யலாம் உலகத்தார்" என்றும்,"பண்ணுகி பாடலாகி பரஞ்சுடராய் நின்றவாறே" என்றும் கூறிய அப்பர் இசையின் பெருமையினையும் அவ் இசைக்கு அடிமையாகும் இறைவனின் திறத்தையும் கோடிட்டுக் காட்டுகின்றார். "கீதேன ப்ரியதே தேவ: ஸர்வஞ: பார்வதீபதி: கோபீ பதி ரனந்தோபி வம்ஸீவதனே வஸம் கத: ! என்று மும்மூர்த்திகளின் திருவருளை, அவர்கள் திருநாமப் புகழ்பாடிப்பெறலாம் என்ற சங்கீத ரத்னாகரத்தின் கூற்றினை மெய்ப்பித்திடும் வகையில் இம்மண்ணில் சாமான்யர்க்கு எளிமையான பக்திப்பாதையினை அமைத்திட்ட பெருமையைப்

பல மெய்யடியார்கள் கொண்டு விளங்கினார்கள்.

வேதங்கள், புராணங்கள் உள்ளிட்டு, இராமாயணம், பாரதம் மற்றும் ஆழ்வார் கருத்துக்களில் ஆழங்கால் பட்டு மாலவன் மீது பல பாக்களைப் புனைந்த இசைக் கவிஞர்கள் வரிசையில், வேங்கடவன் மீது காதல் சுவையும், பக்திச் சுவையும் மீதூர சுமார் 32,000 பாக்களைப் பாடிய 15ஆம் நூற்றுண்டைச் சார்ந்த தாள்பாக்க ஸ்ரீஅன்னமாசார்யா அவர்கள் தனக்கென்று ஒரு இடத்தை,பெற்று, தெலுங்கு இலக்கிய வரலாற்றிலும், வைணவப் பக்தி உலகத்திலும் ஒரு மறுமலர்ச்சியினை உண்டாக்கினார். ஆனால் அவர்தம் இலக்கிய இசைப் பொக்கிஷம் புதையலாகவே சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்புவரை இருந்து வந்தது. தேவஸ்தான மேலாண்மையின் முயற்சியால், திருமலைக்கோயில் வளாகத்தில் ரகசிய அறை ஒன்றிலிருந்து அன்னமய்ய பாடல்கள் பொறிக்கப்பட்ட செப்பேடுகள் கண்டெடுக்கப்பட்டு வெளியுலகிற்குக் கொண்டுவரப்பட்டன. காலத்தின் கொடுமையால், திருவரங்கக்கோயிலில் உள்ள 40 செப்பேடுகள் தவிர்த்து சுமார் 4000 செப்பேடுக மட்டுமே நமக்கு இன்று அவ்அறையிலிருந்து கிடைக்கப்பெற்றுள்ளன. கிடைத்திட்ட அச்சேப்பேடுகளே அன்னமய்யாவின் சமயப்புலமை, பக்திநெறி, இலக்கியச் செறிவு ஆகியவற்றைப் படம் பிடித்துக் காட்டும் சிறப்புடையன. அதனை “யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்” எனும் எண்ணத்தில், “பாட்டு திறத்தாலே இவ்வுலகை பாலித்திட வேண்டும்” என்ற பாரதியின் கூற்றினைச் செயலாக்கும் வகையில், அச்செப்பேட்டுப் பாக்களை நூல் வடிவில் வெளியிட்டும், அப்பாடல்களின் இசை, இலக்கிய பெருமைகளை பலரும் அறிந்து பயன்பெறும் வகையில் பல ஆராய்ச்சி துறைகளை ஏற்படுத்தியும் , அன்னாரின் நினைவுநாள், பிறந்த நாள் விழாக்களை ஆண்டுதோறும் நடத்தியும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் தகுந்த முயற்சிகளை தொடர்ந்து திருப்பதி மற்றும் நாட்டின் முக்கிய பிற இடங்களிலும் செயற்படுத்தி வருகின்றது.

நாளும் பல பிரச்சனைகளால் தாக்குண்டு வரும் நாடும், நாமும் அமைதிபெற வேண்டுமென்றல், அன்பு கொண்டு ஒழுக வேண்டுமென்றல் அதற்கு இசை ஒன்றே மொழி, இனம், இடம் கடந்த ஒரு சாதனமாக இருந்திட முடியும் . அவ் இசை மூலம் அவ் இறைவனின் திருப்புகழ் பரவுமேயானால் - அதனால் சமயத்தின் அடிப்படை நோக்கம் நிறைவேறுமேயானால் அதுவே தனிமனித உயர்வுக்கும், சமுதாய மேன்மைக்கும் வழிவகுக்கும். அதற்கு அன்னமய்யாவின் ‘சுந்தரத்’ தெலுங்குப் பக்திப் பாடல்கள் பெரிதும் துணை புரியும் என்றே நம்புகிறோம்.

## திருமலை மற்றும் அதனைச் சுற்றி உள்ள இடங்கள்

**சுவாமி புஷ்கர்ணி :** கோயிலுக்கருகிலுள்ள இப்புஷ்கரிணி மிகவும் புனிதத்தன்மை கொண்டது. கோயிலுக்குப் புகுமுன், யாத்திரிகர்கள் இக்குளத்தில் ஸ்நானம் செய்தல் வேண்டும்.

**ஆகாச கங்கை :** கோயிலுக்கு வடக்கே 3 கி.மீ. தொலைவில் இந்நீர்வீழ்ச்சி உள்ளது.

**பாபவிநாசம் :** கோயிலுக்கு வடக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

**வைகுண்ட தீர்த்தம் :** கோயிலுக்கு வடகிழக்குத் திசையில் 3 கி.மீ. தொலைவிலுள்ளது.

**தும்புரு தீர்த்தம் :** கோயிலுக்கு வடக்கே 10 கி.மீ. தொலைவிலுள்ளது.

**அதிசய கல்வளைவு :** கோயிலுக்கு வடக்கே 1 கி. மீ. தொலைவில் இவ் அதிசய கல்வளைவு உள்ளது.

**லேபாக்ஷி எம்போரியம் :** நியாயமான விலையில் அழகான கைவினைப் பொருட்கள் இங்கு விற்பனைக்குக் கிடைக்கும். இது தி.தி. தேவஸ்தான மத்திய வரவேற்பு அலுவலகத்திற்கு அருகே உள்ளது.

**தி.தி. தே. தோட்டங்கள் :** அரிய [illegible] மற்றும் செடி வகைகளைக் கொண்டு அழகான, வேலைப்பாடுகளுடன் கூடிய தோட்டங்[illegible] தி.தி. தே. நிருவகித்து வருகின்றது.

**சதஸ் அரங்கு :** தர்ம பிரசார பரிஷத் ஆதரவின்கீழ் இவ்வரங்கில் சமயச் சொற்பொழிவுகள், ஹரிகதை நிகழ்ச்சிகள், இன்னிசைக் கச்சேரிகள், பஜனைகள் ஆகியன நடைபெறும்.

# ஏரார் பொழிற்சூழ் இடவெந்தை

திருமதி. சீ. வசந்தி - சென்னை.

'ஏரார பொழிறசூழ இடவெநதை', உலகபபுகழ பெறற மகாபலிபுரத்தின மிக அருகில சுமார் 10 கி.மீ. தொலைவில உளளது. பெருமபாலான சினிமாத்துறையினர அறிநத இடம திருவிடநதை எனபபடும இடவெநதை ஆகும. ஆயினும, நகரத்தின எநதப பாதிபபுகளும இலலாமல, அமைதி தவழும கிராமத்தின மையத்தில அழகிய பலலவர கால விஷ்ணு வராகப் பெருமானாகக் காட்சியளிக்கும் இடமே திருவிடநதை ஆகும். இவ்வூருககுச செலல, சென்னையிலிருநது பேருநதில சுமார் 42 கி.மீ. தூரம் சென்ருல், கோவளத்தை அடுதது சுமார் 2 கி.மீ. தொலைவில் திருவிடந்தை என்று கேட்டு இறங்கலாம்.

திருவிடந்தை என்ற பெயர், இவ்விடத்திற்கு இவ்வூர் இறைவன் பெயராலேயே வழங்கப்படுகிறது. திருவிடந்தை என்பது, திருவை சிறப்புடன் இடப்புறம் ஏந்தியவன் எனற பொருளில் வழங்கப்பட்டது. கருவறை இறைவன் வராகப்பெருமாள், இலக்குமியை இடப்புறத்தில் ஏந்தியுள்ளார். கி.பி. 8ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த திருமங்கை ஆழ்வார் இப்பிரானை 'இடவெந்தை எந்தை பிரானே' என்றே வழங்குகிருர். இபபோது இறைவன் ஆதிவராகர் எனவும், தேவி, அகிலவல்லி நாச்சியார் எனவும் வழங்கபபடுகிருர்கள். கல்வெட்டுகளில இறைவன் திருவிட நதை தேவன் என வழஙகபபட்டுள்ளார்.

மகாவிஷ்ணுவின மூனறாவது அவதாரம வராக அவதாரம ஆகும். இவவிறைவன பறறி சதபத பிரமாணத்திலும, தைத்தரிய ஆரணயத்திலும, இராமாயணம, விஷ்ணுபுராணம, லிஙகபுராணம மறறும கருடபுராணம ஆகியவறறிலும காணபபடுகினறன.

எலலா ஆலயஙகளிலும வழஙகபபடும தலபுராணம போனறும் இதறகும தலபுராணம் வழஙகப்பபடுகிறது. இத்தல புராணத்தில் காலவன என்ற முனிவர் கூனி எனற பெண்ணை மணம புரிந்து கொண்டார். அவரகளுககு 360 பெண குழநதைகள பிறநதன. தம் மகளிருக்குத் திருமணம் புரிய வேண்டி ஸ்ரீபுரி என வழங்கப்பட்ட திருவிடந்தைககு வந்து இறைவனை வேண்டினார். இவரது வேண்டுகோளுக்கு இணங்கிய இறைவன் கஸ்யப கோத்திரத்தில் பிறந்த அந்தணன் உருவில் வந்து முதல்மகளை மணந்து கொண்டார். மணமகள் முதலில் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடுதல மரபு. எனவே, இம்மணமகளும் கோயிலுக்குச் சென்று வழிபட்டு பின்னர் கருவறையில் சென்று மறைந்தனர். இவவாறு அந்த அந்தணர் 360 பெண்களையும் தினமும் மணநது கருவறையில் ஐக்கியமாகிவிட்டார். முனிவர், தமது மகள்களும் மருமகன்களும் எங்குச் சென்றனர, என அறிய விரும்பி, கோயிலுககுச சென்று பார்ததபோது, மகாவிஷ்ணு வராக மூரத்தியாக 360 பெணகளையும தொடையில அமரததி காடசியளிததார. மேலும, பினனர, இபபெணடிர அனைவரையும ஒனருககி மகாலட்சுமியாக தனது இடபபுறத்தொடையின மீது அமரததி காடசியளிததார. எனவே, இறைவன நிததிய கலயாண பெருமாளாக வழஙகபபடுகிருர. மேலும, பலிசசககரவரத்திககும், மாரககணடேயருககும அருளை வழஙகியப பெருமாளாவார.

கிழககுப பாரதது அமைநதுளள கருவறை சதுரவடிவுடன, அதே போனற கீரவம சிகரததுடன கடடப்பட்டுளளது. அதிட்டானம், உப பீடம் போனற சோழர் காலத்திய கோயில அமைப்பைக கொணடு விளஙகுகிறது. இக்கோயில கடடிட அமைபபு தஞ்சையில் உளள பெரிய கோயிலின் அமைப்பை ஒத்துள்ளது. எனவே, இககோயில் முதலாம் இராஜராஜன் காலததில கறறளியாகக் கட்டப்பட்டிருகக வேணடும். கருவறையின் தேவ கோட்டஙகளில் தெறகில தும்பிக்கை ஆழ்வாராக கணபதியும, திருமால் அச்சுதனாக நின்ற திருக்கோலத்திலும், மேறகுபுற தேவ கோட்டத்தில் சத்தியாவாகவும், வடபுற தேவ கோடடத்தில புருஷனாகவும விளங்குகிருர. மற்றொரு வடபுற தேவ கோட்டத்தில் பதமபீடத்தின் மீது துரககை மேல வலககையில் சககரமும, இடககை கடக

முத்திரையுடன் தொட்டியின் மீது இந்திர விமானம் நின்ற கோலத்தில் காணப்படுகின்றனர்.

கருவறை, அர்த்த மண்டபத்தை அடுத்து, முன் மண்டபத்தில், இம்மண்டபத்தை கட்டியவர்களின் உருவங்கள் அவர்களின் துணைவியர்களுடன் ஒவ்வொரு தூண்களிலும் காணப்படுகின்றன. வராக மண்டபம், ஊஞ்சல் மண்டபம் ஆகிய மண்டபங்களும் காணப்படுகின்றன. இக்கோயிலின் திருக்குளம் வராகப் புஷ்கரணி ஆகும். பள்ளியறையில் அழகிய வேலைப்பாடுகள் கொண்ட தந்தக் கட்டில் உள்ளது. இதில் திருமாலின் பத்து அவதாரங்கள் சிறந்த முறையில் செதுக்கப்பட்டுள்ளன.

சோழ அரசர்களில் மாமன்னனான ஆயிரமாவது ஆண்டு விழா கண்ட முதலாம் இராஜராஜனின் ஆறு கல்வெட்டுக்கள் இக்கோயிலில் உள்ளன. இவனது கல்வெட்டு ஒன்றில் ஆவணி மாதம், இவனின் திருநட்சத்திரமான சதய நாள் தொடங்கி ஏழு நாட்கள் விழா கொண்டாடவும், அவ்விழாவில் இவ்வூரைச் சேர்ந்த பன்னிரண்டு மீனவக் குடும்பங்கள் பங்கேற்க வேண்டும் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதே மன்னனின் மற்றொரு கல்வெட்டில் மலைநாட்டு மற்றொரு வணிகன் அளித்த தானத்தைக் கொண்டு மாசி மாதம் முப்பது நாட்களும் அந்தணர்களுக்கு உணவளித்த செய்தியும், சென்னைக்கு அருகில் உள்ள திருவெற்றியூரைச் சேர்ந்த வணிகன் பங்குனி உத்திரத் திருநாள் அன்று முப்பத்தைந்து அந்தணர்களுக்கு உணவளிக்க அளித்த கொடையும் கல்வெட்டின் மூலம் அறியப்படும் பிற செய்திகளாகும்.

பின்னர், முதலாம் இராஜாதிராஜனின் முப்பத்தைந்தாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1053) திருவிடந்தையில் இருந்து வந்த ஆமூர் கோட்டம் பெயர் மாற்றம் செய்யப்பட்டு கலியாணபுரம் கொண்ட சோழ கோட்டம் என வழங்கப்பட்டுள்ளது. ஏனெனில் முதலாம் இராஜாதிராஜனின், சாளுக்கிய வெற்றியால், அவர்கள் தலைநகரான கலியாணியைக் கைப்பற்றிய காரணத்தால் கோட்டத்தின் பெயர் மாற்றப்பட்டுள்ளது. இக்காலத்தில் பெயர் மாற்றங்கள் நிகழ்வது போல் அக்காலத்திலும், ஊர்களுக்குப் பெயர் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. இதே கல்வெட்டில், எழுபது அலுவலர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும், செக்கிறை (எண்ணெய் எடுக்கும் செக்கிற்கு வசூலிக்கப்படும் வரி) வினியோகம், தறியிறை (துணி நெய்தலுக்கு வரி) தட்டாரப்பாட்டம் (இரும்பு உலைக்கள வரி) போன்ற பல்வேறு வரிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திய கல்வெட்டுக்களில் இவ்வூர் கோயிலுக்கு வழங்கப்பட்ட தானங்கள் பற்றிய கல்வெட்டுக்கள் மூலம் அறியப்படுகிறது. கூறை சோறு இவைகளை தந்து அருள வேண்டி நின்ற திருமங்கை ஆழ்வாரின் பெயரால் 'காளிச்சிங்கன மடம்' என மடம் நிறுவப்பட்டது. அம்மடத்தில் அந்தணர்களுக்கு உணவளிக்கப்பட்டது.

சோழ மன்னர்களுக்குப் பின்னர் தொண்டை மண்டலத்தை பாண்டியர்கள் கைப்பற்றிக் கொண்டனர். ஜடாவர்ம வீர பாண்டியனின் (1314 - 1345) காலத்தில் இவ்வூர் அசுர கால நல்லூர் எனப்பெயர் மாற்றம் செய்யப்பட்டுள்ளது. மற்றொரு பாண்டிய மன்னனான மாறவர்ம வீர பாண்டியன் கல்வெட்டில, கோயிலைச் சேர்ந்த பெண்ணின் நிலம் ஏலத்திற்கு விடப்பட்டுள்ளது. இதனை திருவிடந்தை ஊராரும், சபையாரும் வாங்க விரும்பவில்லை. எனவே, கோயில் ஸ்தானத்தார் அந்நிலத்தை ஏலத்தில்

## ஸர்வ தரிசனம்

திருமலைக் கோயிலில் ஸர்வதரிசனம், புதன், வியாழன் மற்றும் வெள்ளிக்கிழமைகளைத் தவிர நாளும் காலை 6 மணி முதல் 11 மணி வரையிலும், மதியம் 12 மணியிலிருந்து இரவு 7 மணி வரையிலும், இரவு 8 மணியிலிருந்து இரவு 10-30 மணி வரையிலும் அல்லது கூட்டத்தைப் பொறுத்து 'ஸர்வ தரிசனத்'திற்காக பொதுமக்கள் அனுமதிக்கப்படுவர். சாதாரண நாட்களின் போது ஸர்வதரிசனம் நாள் ஒன்றிற்கு 14-30 மணி நேரங்களும், கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களின் போது நாள் ஒன்றிற்கு 18 முதல் 20 மணி நேரங்கள் வரை அனுமதிக்கப்படும்.

வாங்கியுள்ளனர். அக்காலத்தில் அரசாங்கம் நிலத்தினை எடுத்துக்கொள்ளாமல், தனக்குச் சேர வேண்டிய வரியினை மட்டும் பெற முயற்சித்துள்ளது. ஆனால் கோயில் நிர்வாகம் அந்நிலத்தினை வாங்கி வரி செலுத்துவதற்கு வழிவகை செய்ததை நோக்கும் போது, அக்கால கோயில்கள் சமுதாய பொருளாதாரத்தில் பங்கேற்ற பாங்கு நன்கு புலப்படுகிறது.

திருவிடந்தை கோயிலில் பதினாறாம் நூற்றாண்டில், இறைவனின் நீராட்டுதலுக்கு கிணறு ஒன்று அமைக்கப்பட்டது. மற்றும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் செட்டியார் சமூகத்தினர் பல தானங்களை வழங்கியுள்ளனர்.

திருவிடந்தை திருக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் பிரம்மோத்ஸவம், சித்திரை மாதம் தொடங்கிக் கொண்டாடப்படுகின்றது. மேலும், வைகுண்ட ஏகாதசியும், ஆனி, ஆடி, தை மற்றும் மாசி மாதங்களில் கருட சேவையும் மற்றும் மற்ற வைணவத் தலங்களில் கொண்டாடப்படும் விழாக்களும் இத்தலத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. இங்கு வரும், திருமணம் ஆகாத ஆண் பெண் இருபாலரும் இறைவனை வேண்டித் தொழுதால் திருமணம் கைகூடும் என்ற நம்பிக்கையும் இத்திருத்தலத்திற்குப் பெருமை சேர்க்கிறது.

மகா விஷ்ணுவின் மூன்றாவது அவதாரமான வராக அவதாரத்தில் இறைவன் காட்சியளிக்கும் தலங்கள் மிகக் குறைவு. எனவே, திருவிடந்தை இறைவனை வணங்கி வழிபடுவோம்.

✦



## தி.தி. தேவஸ்தானத்தார்

# ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்:

காலை

5-00 முதல் 5-30 வரை — சுப்ரபாதம்
5-30 „ 6-00 வரை —ஸகஸ்ரநாம அர்ச்சனை [illegible]
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 „ 6-30 வரை —சுத்தி—முதல்மணி
6-30 „ 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ —சுத்தி 2-வது மணி
12-00 „ 6-00 மாலை—ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ —சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 „ இரவு—ஸர்வதரிசனம்
9-15 „ 9-30 „ —சுத்தி, ஏகாந்தசேவை.

## வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 முதல் 10-00 வரை —அபிஷேகம் (ரூ. [illegible] செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 முதல் 10-00 „ —அபிஷேக தரிசனம்
(ரூ. 2/-நபர் ஒருவருக்கு)

## ஆர்ஜிதக் கட்டண விபரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- நபர் ஒருவருக்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் |
|---|---|---|
| (அ) பொங்கல் | „ ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் ரூ. 63-00 |
| (ஆ) புளியோதரை | „ ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் ரூ. 52-00 |
| (இ) தத்யோதனம் | „ ரூ. 75/- | (இ) தோலோற்சவம் ரூ. 100/- |
| (ஈ) கேஸரிபாத் | „ ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) |
| (உ) சர்க்கரைப் | | (ஈ) திருப்பாவாடை ரூ.2000/- |
| பொங்கல் | „ ரூ. 135/- | (கிருஹஸ்தருக்கு [illegible] கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப் படும். |
| (ஊ) தோசை | „ ரூ. 300/- | (அர்ச்சனை (அஷ்டோத்ரம்) செய்ய |
| (எ) ஸாகரபாத் | „ ரூ. 150/- | விரும்பும் பக்தர்கள் அதற்கான |
| (ஏ) ஸீரா | „ ரூ. 300/- | ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக்கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) |

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகளுண்டு.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டம்

காடு வளர்ப்பு அவசியத்தை முன்னிட்டும் அரிய மரம், மூலிகை, கனிவகைகளை பயிரிடும் முக்கியத்துவத்தைக் கருத்திற்கொண்டும், குறிப்பாக திருமலையைச் சுற்றியும், மற்றும், திருப்பதி மலைச் சரிவுகளையும் சார்ந்த காட்டுப்பகுதியாக மாற்றி, ஓர் அழகான இயற்கை சூழ்ந்த தோற்றத்தை ஏற்படுத்திடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தின் வனத்துறை கடந்த பல ஆண்டுகளாக பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. இவ்வகையில் இம்முயற்சியினை மேலும் தீவிரமாக்கிடும் வகையிலும், இம்முயற்சியில் வேங்கடவன் பக்தர்ளையும் பெருமளவில் பங்கேற்க செய்யவும், தி.தி. தேவஸ்தானம் கீழ்வரும் பல புதிய காடு வளர்ப்பு மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களை நாட்டிலுள்ள பக்தர்கள ஓர் அரிய வாய்ப்பாகக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் ஒரு ஏக்கர் நிலம் 'மரம் வளர்ப்பு' நிலமாக மாற்றப்படும்.

**சலுகைகள் :**

இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இந் நிலம் அழைக்கப்படும்.

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்கள் தங்க, தங்கு வசதிகள் இலவசமாக அளிக்கப் படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர் களுக்கு சிறப்புநுழைவு தரிசன வசதி செய்து தரப்படும்.

நன்கொடை : ரூ. 15,000

### விருக்ஷ பிரஸாதம்

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் 100 பழ அல்லது மலர் விதைகள் விநியோகிக்கப்படும்.

**சலுகைகள் :**

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்களுக்கு இலவச தங்கு வசதி அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர் களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி அளிக் கப்படும்.

### ஸ்மாரக வனாலு

(நினைவு மரங்கள்)

இத்திட்டத்தின் கீழ் தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும்.

**சலுகைகள் :**

* நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.
* ஐந்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர் களுக்கு சிறப்பு நுழைவு வசதி மேற்கொள்ளப் படும்.

நன்கொடை : ரூ. 2000

### வன சம்ரக்ஷண பாகஸ்வாமயம்

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கை யான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத் தப்படும்.

**சலுகைகள் :**

* இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாள ரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக் கப்படும்.
* ஓர் ஆண்டின் போது, 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. 1000

### அத்யயன வனாலு

இத்திட்டத்தின் கீழ், தாவர இயல் பூங்காவில் ஒரு குறிப்பிட்ட செடியினம் நடப்பட்டு பராமரிக் கப்படும்.

**சலுகைகள் :**

* செடியருகே நன்கொடையாளரின் பெயர் காட் சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 500

### விருக்ஷ தத்ததா

(மர தத்தெடுப்பு)

இத்திட்டத்தின் கீழ் திருமலை மலை வழிச்சாலை ஓரமாக மரம் நடப்பட்டு தத்து எடுத்துக்கொள் ளப்படும்.

**சலுகை :**

* மரத்தின் அருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 250

ஏழுமலையான் நின்றருளும் இப்புனித மலைகளை பசுமையும், அழகும் மிளிர்ந்து விளங்கிட, மேற்படி திட்டங்களுக்கு தாராளமாக நன்கொடை அளிக்க முன் வருமாறு பக்தர்கள் கேட்டுக் கொள் ளப்படுகிறார்கள்.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

# கீர்த்தனை

டாக்டர் தோவி. நரசிம்மன் - அனந்தப்பூர்.

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்பர் ஆன்றோர். இவ்வாறு பெறுவதற்கரிய மனிதப்பிறவி எடுத்த ஒருவர் உண்பதும் உறங்குவதுமின்றி நித்தியமாய் விளங்கும் இறைவனை, இறைவனின் திருக்குணங்களை அறிந்து ஆனந்தித்து வாழ்தல் வேண்டும். அதுவே மனிதன்பெறும் பேறுகளில் தலையாயதாகும். 'இறைவனின்றித் தானில்லை' என்றும் 'இறைவனே எல்லாம்' என்றும் வாழ்ந்தோர் எண்ணற்றோர். சைவ மத பக்தர்களைத் அடியார்கள் எனவும், வைணவ மதப் பக்தர்களை தாசர்கள் எனவும் அழைப்பர். தாசர்கள் பெரும்பாலும் கீர்த்தனைகளை இயற்றிப் பேரும் புகழும் பெற்றனர்.

இறைவனைப் புகழ்ந்து பாடும் தோத்திர இசைப்பாடல்களே கீர்த்தனை எனலாம். இது மட்டுஇன்றிக் கீதம், கிருதி என்பனவும் உள. இவைகளுக்குள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கீழ்வரும் அட்டவணை விளக்கும்.

கீதம், கீர்த்தனை, கிருதி எனும் மூன்றனுள் சிறப்புடையது. கீர்த்தனையாகும். இதன் உறுப்புகளான் பல்லவி, அநுபல்லவி, சரணம் முதலியன பற்றி இங்கு விளக்கப்பெறுகிறது.

பல்லவி எனும் வடமொழிச் சொல்லுக்கு அடி (பாதம்), தளிர் எனும் இருபொருட்கள் உள. கீர்த்தனையின் உட்கருத்தைக் குறிப்பதாகப் பல்லவி அமையும். இது ஈர் அல்லது ஓர் அடியாக விளங்கும். பல்லவியில் சிற்சில விடங்களில் இயைபுத் தொடை வருவதுண்டு. எடுத்துக்காட்டாக,

"அஞ்சவேண்டா மனதே-இனிநீ
அஞ்ச வேண்டா மனதே"

(அரிபஜனைக் கீர்த்தனை-30)

எனும் பல்லவியில் 'மனதே' எனும் சொல் ஈற்றுச் சொல்லாக வந்து இயைபுத் தொடையாக அமைகின்றது. இந்நயம் அன்றி எதுகைத் தொடையும் பல்லவியில் வருவது இயல்பு. அவ்வாறு வருங்கால் அநுபல்லவியின் முதல்படியிலிலும் அதே எதுகை வரும். இது பல்லவியை எடுப்புடையதாக்கும் உத்தியாகும்.

பல்லவி

பனாதநாளை பிடித்து நம்
பயமானடி மறந்து
பாழ்கினைந்தேன் வீழ்கிறேய்
(பனாத்)

அநுபல்லவி

பிணமான பின்னிந்த பனங்கூட
வருமோ
பேயோ - பேயோ - பேயோ -
நாதேயோ (பனாத்)

என எதுகை அமைந்துள்ளதைக் காணலாம். இது அநுபல்லவியைத் தொடர்ந்து வரும். சரணங்களில் வருவதில்லை. பல்லவி பின்வரும் மேலும் சில குணங்களைப் பெற்று வரும்.

1. பல்லவி தனிச்சொல் பெற்றும், பெறாமலும் வரும். (பல்லவி இரண்டடியாக இருந்தால் தனிச்சொல்பெற்றும் பெறாமலும் வரும். ஓரடியாக அல்லது நான்கடியாக இருந்தால் தனிச்சொல இன்றி வரும்.)

2. வினா அமைப்பில் வருதல்.

**ஸ்ரீரகுபதியுந்தன் திருமலரடிகளை**
**சேருவதினி நானெப்போ?**

(அ.ப.கீ. 21)

| எண். | கீதம் | கீர்த்தனை | கிருதி |
|---|---|---|---|
| 1) | ஒரேபாடல் (பிரிவுகள் இல்லை) | பல்லவி அநுபல்லவி சரணம் (அநுபல்லவி இல்லாமலும் வரும்) | பல்லவி, அநுபல்லவி சரணம். |
| 2) | இசைப்பாடல் | இலக்கியச் சிறப்பு உடையது | இலக்கியச்சிறப்பு மேன்மைக்குறைவு |
| 3) | இசைத்திறம் அதிகம் | இசைத்திறம் குறைவு | இசைத்திறம் அதிகம் |
| 4) | மேடைக்கு உகந்ததன்று | மேடைக்கு உகந்தது | மேடைக்கு உகந்தது |



3. ஆணையிடுதல் போலமைதல்.

மறவாதிரு மனமே ஸ்ரீஹரிநாமம்
மறவா திருமனே (அ.ப.கீ. 11)

4. உறுதிப்பாடு

உனை நாடினேன் ஐயா
ஹரியே (அ.ப.கீ. 22)

5. வியப்பு

கூரத்தாழ்வானைப் போலேது
குவலயத்தின் மீது.

கீர்த்தனையின் இரண்டாவது உறுப்பாக அமைவது அநுபல்லவியாகும். இது பல்லவிக்குத் துணையாக வந்து சிறப்புச் செய்கிறது. இது பல்லவி அளவே வருதலும் பல்லவி அமைந்த அடிகளினும் மிக்கு வருதலும் உண்டு. அநுபல்லவி முடிந்ததும் மீண்டும் பல்லவி பாடுதல் மரபு.



பல்லவி

நமக்கினி எமபயமேது நம்-
ராமனருளியிருக்கும் போது

அநுபல்லவி

நமனை யுதைத்த சிவன்
ரகசியமாக வந்து
உமையவளுக்குக் காதிலுரைத்த
சொல் இருக்கையில்
(நமக்) (அ.ப.கீ. 29)

கீர்த்தனையின் அடுத்த இன்றியமையாத உறுப்பாக அமைவது சரணமாகும். சரணத்தில் பொதுவாக மூன்று பாடல்கள் வருதல் உண்டு. சில சமயங்களில் இரண்டோ அல்லது மூன்றுக்கு மேற்பட்டு வருதலும் உண்டு. பல்லவியில் தொடங்கிய ஒலிநிலை அநுபல்லவிக்குச் செல்லும். அநுபல்லவியினும் உயர்ந்த ஒலிநிலைக்கு இராகம் சென்று பின்னர் இறுதிநிலை அடைந்து அமர்வது சரணத்தில்தான். பல்லவி, அநுபல்லவிகளில் குறிக்கப்பெற்ற கருத்து சரணத்தில்தான் விஸ்வரூபம் எடுக்கிறது. சரணத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் பல்லவி பாடப்பெறும். சரணப்பாடல்களை ஒரே மூச்சில் பாடக்கூடாது. அவ்வாறு பாடின் சிறப்புப் பெறுது. ஈற்றசைச் சீர் ஒன்றிவரும் இயைபுதொடை சரணத்தில் சிறப்புப் பெறுகிறது.

பொல்லாத சம்சார வாழ்வும்
பொய் மனமே
பொருளும் ஈரேழுலகமும்
பொய் மனமே
சில்லரைத் தெய்வங்கள் எல்லாம்

பொய் மனமே
ஸ்ரீராம நாமமந்திர மொன்றே
மெய் மனமே
(அ.ப.கீ. 22)

பல்லவி எந்த இராகத்தில் பாடுப்படுகிறதோ அதே இராகத்தில் சரணத்தின் இறுதி வரை பாடப்படுதல் வேண்டும். தாளமும் அதே பாணியில் இடம்பெறுதல் வேண்டும். கீர்த்தனை அடிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு இராகம் வரின் அதனை 'இராகமாலிகை' என்பர். கீர்த்தனைப் பாடலில் ஏழு சுரங்கள் 'சரிகமபதநி'யை மாற்றி மாற்றிப் பாடினால் அதைச் சுரம் பாடுதல் என்பவர். கவிஞன் தான் குறித்த சுரக்கட்டுக்களை அப்படியே பாடகன் பாடினால் அதைச் 'சிட்டைச் சுரம் பாடுதல்' என்றும், பாடகன் தானே சுர வரிசை அமைத்துப் பாடினால் அதனைக் 'கற்பனைச் சுரம்' எனவும் அழைப்பர்.

வடமொழிச் செல்வாக்கைப் புலப்படுத்துதல் நான்காவது குணமாகும். கீர்த்தனை இயற்றுமாசான் வடமொழி நூல்கள் கற்றுப் புலமை பெற்றவராதலின் நூலின் இடையிடையே வடமொழிச் சொற்களைக் கையாள்வர். இன்னும் சில புலவர்கள வடமொழிக் கீர்த்தனையை இடையே சேர்த்தலை மரபாகக் கொணடனர்.

எடுத்துக்காட்டாக :

பல்லவி
பஜரே எதிராஜம் - மானஸா-
பஜரே - எதிராஜம்
அநுபல்லவி
பஜயா சூரிகேசவார் யதநூஜம்
நிஜபக்த ஜனஸன்
நுதபதாம் போஜம் (பஜரே)

சரணங்கள்
அத்வைதமத விச்சேதப்ரதாபம்
மிர்துபாஷனை வரமுனிதல நீபம்
(பஜரே)
திரிதனாட ...சுஜன பயனாஸம்
புதஜன விநுத ஸ்ரீபுதபுரிஸம்
(பஜரே)
திருவேங்கட குருரூப தயாளம்
குருகுலவர பராங்குச பதயுகளம்
(பஜரே)
(அ.ப.கீ. 4

கீர்த்தனை இலக்கியங்களில் மேற்கூறிய உறுப்புக்கள் தவிர கட்கா, கண்ணி, சிந்து, விருத்தம், வெண்பா முதலிய பா வகைகளும் வருதல் உண்டு.

1. கட்கா என்பது, பல்லவியைப் போன்றே தொடக்க அடி ஒன்றோ அல்லது இரண்டாகவோ அமைந்து அதனைத் தொடர்ந்து பல அடிகள் வந்தால் அதனைக் கட்கா என்பர். இது வருணனைப் பகுதிக்கு ஏற்றது.

2. கீர்த்தனைகள் சிறப்புப் பெற சில நேரங்களில் கீர்த்தனை ஆசிரியர்கள் கன்னிகளைப் பயன்படுத்துதல் உண்டு.

அஞ்சையு மடக்கி பிரபஞ்சத்தி
விருப்போர்க்கு
தஞ்சமேது இனிமேல் -
இத்தரையினில்
வஞ்சமேது இனிமேல்.

ஆசையும் வேரறுத்தோர்க்கு காம
விகாரமேது இனிமேல் துஷ்கர்ம
விகார மேது இனிமேல்

எட்டெழுத்தையு நிதம்
அனுஷ்டிப்பவர்களுக்கு
நஷ்டமேது இனிமேல்
அவர்களுக்கோர்
கஷ்டமேது இனிமேல் (அ.ப.கீ. 7)

3. சிந்து, இறைவனைப் பற்றிய கீர்த்தனைகளை இயற்றப் பெரிதும் பயன்படும். இறைவனின் நாமங்கள், குணங்கள் பாதாதி கேச வருணனை முதலியவற்றை எளிய நாடக முறையில் கூறச் சிந்து பயன்படும்.

4. கீர்த்தனையிடையே சில செய்திகளை நேரடியாகக் கூற வெண்பாக்களையும் நீதிகளை அல்லது திட்டவட்டமான ஒரு கருத்தைக் கூற விருத்தங்களையும் பயன்படுத்துவர்.

5. நூலின் முதலிலும் இறுதியிலும் மங்கலவாழ்த்து இடம் பெறும்.

6. ஐந்து மணி போன்ற விருத்தப்பாக்கள் கீர்த்தனை நூலில் விரவி வந்தால் அதனைப் பஞ்ச ரத்தினம் என்பர். ஐந்து பாடல்களின் ஈற்றடிகள் ஒன்றுபோலவே இருத்தல் இதன் தலையாய பண்பு.

கீர்த்தனை இலக்கியங்களில் அடுத்து காணப்பெறும் உறுப்பு முத்திரையாகும். இது பிறஇ



ஸ்ரீசந்திர சூடேஸ்வரர் - ஓசூர்.

லக்கியங்களில் காணுது கீர்த்தனையில் மட்டும் காண முடிகின்றது. தனிக்கீர்த்தனையிலோ நாடகக் கீர்த்தனையிலோ ஆசிரியர்கள் தங்கள் பெயரை நேரடியாகக் கூருது தன் ஊர், வீட்டுப்பெயர் முதலியன குறித்தல் மரபாகும். எடுத்துக்காட்டாக,

"பவாகரத்தில் பிறந்திடும்
தாபம் - சுட்டுப்
பாழ்ப் செய்யுமரி நாம
மென்றதீபம் - இந்தக்
குவலயத்தில் வந்து
மானிடரூபம் ஸ்ரீபராங்
குசதாசனாகாவிட்டா லென்னலாபம்"
(அ.ப.கீ. 15) (மனமே)

எனும் கீர்த்தனையில் பராங்குச தாசர எனக்கவி தன் பெயரை நேரடியாகக் கூறிக்கொள்ளுதல் காணமுடிகின்றது.

பாசபந்தங்கள் வலையறுத்தோம்-
ஸ்ரீமத்
பராங்குசதாசர் வேஷந்தரித்தோம்
ஸ்ரீசைலகுலத்தில் வந்துதித்த
திருவேங்கட
தேசிகருக்குப்பிரிய
சிஷ்யராயிருக்கையில்
(அ.ப.கீ. 29)

எனவரும் கீர்த்தனையிலிருந்து கவிஞன் தன்னை நேராகக் கூருது தேசிகனுக்குச் சீடனாய் இருப்பதை விளக்குகிறுர்.

இவ்வாறு பல்லவி, அநுபல்லவி, சரணம ஆகிய மூன்று தலைமையான உறுப்புக்களையும் கனனி, சிந்து, கட்கா முதலிய துணை உறுப்புக்களையும் பெற்று இசையோடு இயைந்து சிறிது இலக்கியச் சுவை பொருந்தியதே கீர்த்தனை (இலக்கியம்) ஆகும்.



# அறிவு

புலவர் சோமசுந்தரப்பெருமாள் - தங்கவயல்.

அறிவு அறிவு அறிவு எங்கும் எவரிடத்திலும் இதே பேச்சு. இவ்வறிவானது எப்படி இருக்கும் அதன் நிறம் மணம் குணம் என்ன என்பது எத்தனையோ பேருக்கு புரிந்தும் புரியாத வண்ணமாகவே விளங்கக் காணலாம். அறி+வு=அறிவு என்றும்.

அறி -என்றால் உணர்தல், தெளிதல், அனுபவித்தல் என்பது பொருள்.

வு -என்றால் உரைத்தல், உணர்தல், உவத்தல் என்பது பொருள்.

ஆக அறிவு என்றால் அறிந்ததை அதாவது தெரிந்து கொண்டதை பிறர்க்கு உணர்த்துவது என்பது பொருள். மற்றவர்க்குச் சொல்லி விளங்க வைப்பதற்கும் அறிவு என்றே பொருள்படும்.

ஒரு கிராமத்தான் ஒருவன் தன் மகனுடன் ஒரு ஊரில் உள்ள சத்திரத்தில் இரவில், கும்மிருட்டு வேளையில் நுழைகிறார்கள். அங்கே சிலர் தூங்கிக்கொண்டு இருக்கிறார்கள். கூட்டத்தில் ஒரு சந்நியாசியும் தூங்கிக்கொண்டு இருக்கிறார். அவர் பக்கத்தில் சிறிது இடம் இருப்பது போல் அக்கிராமத்தானுக்கு இருளில் படுகிறது. உடனே தன் மகனும் தானும் அவ்விடத்தில் ஒரு துண்டை விரித்துப் படுத்துக் கொள்கிறார்கள். தூக்கத்தில் அவனும் பையனும் அந்த சந்நியாசி மீது கால்களையும் கைகளையும் தூக்கிப்போட்டு உதைக்கின்றனர். சந்நியாசியால் தூங்க முடியவில்லை. விடியும் வரை எழுந்து உட்கார்ந்திருந்து விட்டு அந்த சந்நியாசி அகலுகிறார். அப்போது அந்த சந்நியாசி 'இந்த ஆளுக்கு கொஞ்சம் கூட அறிவே கிடையாது. எங்கேயாவது வாங்கி இருந்தால் தானே' என்று புலம்பிக்கொண்டே வெளியேறியது அக்கிராமத்தான் காதில் விழுந்துவிட்டது. அக்கிராமத்தான் பொழுது விடிந்ததும் தன் மகன் கையில் ஐந்து ரூபாய் கொடுத்து 'டேய் பையா, இந்த ஊரில் எந்த கடையிலாவது அறிவு இருக்கும். நீ சென்று அரை கிலோ வாங்கி வா' என்று அனுப்புகிறார். கடைக்காரர்கள் கடை திறந்து வைத்துக்கொண்டு முதல் போணிக்குக் காத்திருக்கிறார்கள். ஒரு கடை முதலாளி இந்த கிராமத்துப் பையனைப் பார்த்ததும் 'தம்பி என்னவேணும்' என்கிறார். பையன் 'அறிவு இருக்கா' என்கிறான். கடை முதாலளியும் வேலைக்காரப் பையனும் சேர்ந்து பையனை நையப்புடைத்து அனுப்பினார்கள். இதே போல் பக்கத்து கடைகளிலும் கேட்டு அவன் அடிவாங்கி திரும்புகிறான். கிராமத்து ஆள் மகனைப் பார்த்து 'மகனே உனக்கு என்ன ஆச்சு' என்று பதறுகிறான். 'நீ சொன்னமாதிரி அறிவு இருக்கான்னு எல்லா கடைகளிலும் கேட்டதால் வந்த வினை இது' என்கிறான் பையன். இவர்கள் அறிவை எந்த அறிவில் நாம் கொண்டு சேர்ப்பது.

உண்மையான அறிவை அதாவது இறை அறிவை அறிகின்ற அறிவுதான் அறிவாகும். அதாவது அறிவால் அறிவை அறிய வேண்டும். "அறிவால் அறிந்து இருதாள் இறைஞ்சும் அடியார் இடைஞ்சல் களைவோனே" என்கிறார் அருணகிரிப்பெருமான். நமது அறியும் அறிவால் அறிய வேண்டியதை அறிந்து அவ்வறிவின் இருதாள் பற்றி இறைஞ்சும் நிலைபெற வேண்டும் என்கிறார் அருணகிரியார். அதாவது ஒன்று அறியும் பொருள், மற்றொன்று அறியப்படும் பொருள்.

அறியும் பொருள் - ஞானம் (அறிவு)
அறியப்படும் பொருள் - கடவுள்

இப்படிப் பொருள் கொண்டு சிறப்பதே உண்மை அறிவாகும். அதனால்தான் அறிவு ஆழமாக இருக்கவேண்டும். அகலமாக இருக்கவேண்டும். கூர்மையாக இருக்க வேண்டும். அதுதான் முருகன் கையில் உள்ள வேல் என்று விளக்கம் கூறுவார்கள். கடவுள் ஞானச் சொரூபன். அறிவு மயமானவன் - ஒளிப்பிழம்பு ஆனவன் என்பது பொருள். அவனை உண்மையான அறிவுக்கண் கொண்டே நோக்க வேண்டுமே அல்லாது ஊனக்கண் கொண்டு நோக்கமுடியாது. 'உள்ளக் கண் கொண்டு உள்ளத்தை நோக்க அருளவாயே' என்கிறார் அருணகிரியார்.

அதாவது நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. அது நெருப்பு என்பது அனைவருக்கும் தெரியும். ஆனால்

அதில பொதிந்துள்ள மூலப் பொருளை சரியாக விளங்கிக் கொண்டோம் இல்லை. அப்படி விளங்கினால் அதுவே அறிவு.

அதாவது,

நெருப்பின் நிறம் - காட்சி அறிவு.
நெருப்பின் ஒளி - விலக்கும் அறிவு.
நெருப்பின் சூடு - மெய் அறிவு அல்லது புலன் அறிவு.
நெருப்பின் வடிவம் - மயக்க அறிவு.
நெருப்பின் புகை - உறுதி அறிவு.

இவ்வகையாக அறிவின் வகைகளைப் பிரித்துப் பொருள் கொள்வாரகள் சான்றோர்கள். இதன் விளக்கம் வருமாறு:

## காட்சி அறிவு :

கண்ணுக்குப் புலப்படும் ஒன்றை அவ்வளவில் உருவம், நிறம், திறம் இவைகளைக் கொண்டு அது இன்னது அது இததகையது என்று உணர்ந்து கொளளுதல். சாலையில் ஒருவன் அடிபட்டு வீழ்ந்திருக்கிறான். அது பார்த்தவுடன் விபத்து நடந்து உள்ளது என்று புரிந்து கொள்கிறோம். இதுவே காட்சி அறிவு.

## விலக்கும் அறிவு :

விளக்கு எரிந்ததும் இருள் விலகுவது போல் உணர்வினால் விலக்கிக்காண்பது விலக்கு அறிவாகும். அதாவது சாலையில் விபத்துக்குள்ளான மனிதனிடம் செல்லக்கூடாது, அவனைத் தொடக்கூடாது என்று நம்மை விலக்குகிறது அல்லவா, இதுவே விலக்கும் அறிவு.

## மெய் அறிவு அல்லது புலன் அறிவு :

உண்மையை அறிந்து கொள்ளப் பயன்படுவது மெய் அறிவு ஆகும். அல்லது புலன்களால் அறிவது. மெய், வாய், கண் மூக்கு, செவிகளால் அறியப்படும் அறிவு புலன் அறிவாகும். விபத்துக்குள்ளான மனிதன் எந் நிலையில் எப்படி, எதற்காக ஆனான் என்று துல்லியமாக அறிதல் மெய் அறிவு ஆகும். அவ்விபத்துக்கு உள்ளான மனிதனிடமிருந்து வெளிப்படும் நாற்றமும் புலன் அறிவாகும்.

## மயக்க அறிவு :

இங்குக் காணும் காட்சி உண்மையோ பொய்யோ என்று விளங்கமுடியாமல் காண்பது மயக்க அறிவாகும். விபத்துக்குள்ளான மனிதனின் உயிர் இருக்கிறதோ அல்லது பிரிந்து விட்டதோ என்று கருதுவது மயக்க அறிவு ஆகும்.

## உறுதி அறிவு :

காணும் காட்சியின் உறுதிப் பொருளை தீர்க்கமாக முடிவெடுக்கும்படி உணர்வது உறுதி அறிவாகும். அதாவது விபத்துக்குள்ளான மனிதன் பேருந்தில் அடிபட்டு வீழ்ந்திருக்கிறான். அடிபலமாகப் பட்ட காரணத்தால் உயிர் பிரிந்து விட்டது. பாவம் அவனது விதி முடிந்துவிட்டது என்று விளங்க வைப்பது உறுதி அறிவு ஆகும். இவ்வைந்தையும் அப்படியே நேர்மாறாகக் காணுங்கள். அதாவது எதிர்பதமாகப் பாருங்கள். புதுவித இன்பமும் வேறுபல உண்மைகளும் உங்களுக்கே விளங்கும்.

1. இவ்வுலகமும், தனு கரண புவன போகமும், உயிர்களும் கடவுளால் உண்டாக்கப்பட்டது என்று நாம் அறிவால் காண்பது காட்சி அறிவு.
2. இவ்வுலக மாயையில் சிக்கக் கூடாது. ஆணவ மலத்தில் இருந்து விடுபட வேண்டும் பாச பந்தங்களால் சிக்காது இறையருளைப் பெற வேண்டும் என்று உணர்த்தி இவ்வுலக பந்தத்தில் இருந்து நம்மை தூரப் படுத்துவது விலக்கு அறிவாகும்.
3. உடலும், உடலுக்குள் உயிரும் இருப்பது மெய். இவ்விரண்டுக்கும் உடமை ஆனவர் இறைவன். கடனாகப் பெற்ற உடம்பு இறுதியில் கடவுளுக்கே சேர்வது என்ற உண்மையை உணர்த்துவது மெய் அறிவு அல்லது புலன் அறிவு ஆகும்.
4. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களால் ஆட்கொள்ளப்பட்டு உயிர்கள் மயங்குகின்றன. பிறவிப் பெருந்துன்பம் நீக்க இயலாமல் தவிக்கும் நிலையே மயக்க அறிவாகும்.
5. புகை வந்தால் நெருப்பு இருக்கும் என்று உறுதிப்படுத்துகிறோம். அதுபோல் உலகமும், உயிர்களும் உணடான போதே அவைகளுக்கு உடையவனாக இருப்பது இறைவனே. அவ்விறைவனை சென்று உயிர்கள் சேர்தலே நிலைபேறாகும். இதுவே உறுதி அறிவாகும்.

இவ்விதம் பேரின்பப் பெருமைகளை பேசுவதற்குப் பிறப்பிககப்பட்டவையே இவ்வைந்தறிவு ஆகும். இவைகள் தவிர ஆறுவது அறிவு ஒன்று உள்ளது. அதுவே ஞான அறிவு ஆகும். மனிதனுக்கு மட்டுமே பகுத்தறிவு ஆறுவது

அறிவு உண்டு. அதுவே ஞான அறிவு. ஞான அறிவு என்னும் போது உலக கருமங்களில் ஈடுபடும்போது விளையும் நன்மை தீமைகளை மட்டும் உணர்ந்து வெளிப்படுத்துவது அல்ல. அத்துடன் அனைவரும் அறியப்படும் பொருளாக இருக்கும் இறைவனை அறிந்து ஒழுகுதலும், அடைக்கலம் தேடுதலும், அனைவரும் அறிந்து பயன் பெறும்படிச் செய்தலும் எல்லாம் ஞான அறிவு வகைப்படும். ஞானம் பெற்ற மனிதன் உலக பந்தத்தில் இருந்தும், உலக நடவடிக்கையில் இருந்தும், உலக மாந்தரது தளையில் இருந்தும், உலகத்தார் உறவில் இருந்தும் வேறுபட்டு விலகி இருக்கும் காட்சியாக விளங்குக்காண்பார்கள். இதனைத்தான் அருணகிரியார் அறிவால் அறிந்து என்றார்கள்.

உலக போகங்களையும், உலக அனுபவங்களையும் அறியும் அறிவு வேறு. உடையவனாய் இருக்கும் உறுதிப்பொருளை அறியும் அறிவு வேறு. இதனையே சித்தாந்தமும் வேதாந்தமும் பதிஞானம், பசுஞானம், பாசஞானம் என்று கூறும் அழகான ஒரு இயற்கைக் காட்சியை, உங்கள் கண்களைத் துணியால் கட்டிவிட்டு பார்க்கச்சொல்கிறார் உங்கள் நண்பர். அது எப்படி முடியும். அவ்வாறு இயற்கைக் காட்சியாக இருப்பவர் இறைவன் (பதி). அவரைப்பார்க்கும் கண்களை உடையவர் நீங்கள். (பசு). உங்கள் கண்களை கட்டிய துணி மாயை. (பாசம்). இம்மூன்றையும் கண்டு தெளியும் அறிவே சிறந்த அறிவாகும். இவ்வறிவு கைவரப் பெற்றால் அப்புறம் உங்களது யோகப் பயிற்சிக்கும், ஞான யாத்திரைக்கும் யாரும் தடைவிதிக்கமுடியாது என்பது திண்ணம். 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே' என்கின்றனர். இப்பிறப்பில் இறைவனை எண்ணுவதும் காணுவதும் சிறந்த வாய்ப்பாகும்.

இவ்வறிவானது எப்படி நமக்கு வரும் என்றால் சூரியன் உதித்ததும் ஒளிக்கிரணங்கள் எப்படி நிலத்தில் பதிகின்றதோ அப்படி தானே தோன்ற வேண்டுமாம். அறிவு அறியாமையை நீக்குவதால் அது அத்துவிதம் எனப்பட்டது.

"அறிவெனில் வாயில் வேண்டா
அன்றெனில் அவைதாம் என்னை
அறிவதை யுதவும் என்னில்
அசேதனம் அவைதாம் எல்லாம்
அறிபவன் அறியுந் தன்மை
யருளுவன் என்னில் ஆன்மா
அறிவிலதாகும் ஈசன் அசேதனத்து
அளித்திடானே (சிவப்பிரகாசம்)

உயிர் தானாகவே எதனையும் அறியும் தன்மை பெற்றது ஆகாது. இறைவன் அறிவிக்க அறிவது உயிர். அறிவித்தபடி புலன்கள் வழி நுகரும் செயலுக்கு அசேதனம் என்று பெயர். ஆன்மாக்கள் நன்மை பயக்க வேண்டும் என்ற (முக்தி) பெருங்கருணையால் இறைவன் அறிவிக்கின்றார் என்னும் போது பிறந்த உயிர்களமேல் இறைவன் கருணை - இரக்கம் வைக்க வேண்டும் என்பதே கேள்வி. இவையில்லாவிட்டால் அசசகதிககு இறை என்ற பேர இல்லை என்பதாகும். எனவே இவ்விறைவனுடன் வைத்துக்கொள்ளும் உறவு எத்துணைச் சிறப்பு வாய்ந்தது என்பது விளங்கும். 'அறிவோ அறியேனோ யாது' என்று கூறுவேன் ஆய்ந்து' என்கிறது இருபா இருபஃது என்னும் நூல்.

அறிவை ஆய்வு செய்வது எங்ஙனம் என்பது பொருள். 'பிறப்பிக்கப்பட்ட நானோ அறிவிலா மனமுடையவன்' என்கிறார் திருநாவுக்கரசர் சுவாமிகள். "அறிவிலங்கு மனத்தானை அறிவார்க்கன்றி அறியாதார்" இறைவன் ஒருவனைத் தவிர வேறு யாரும் அறியமுடியாது என்பது இதன் பொருள்.

இவ்விதம் சொல்லப்பட்டவைகளால் அறிவு என்பது உயர்ந்த பொருள். அது இறைவனால் உணரத்தப்படுவது. உணர்த்தப்பட்ட அறிவால் அறியப்படுபவன் இறைவன். அறிந்ததால் கிட்டும் பேறுதான் பிறவா நிலை. அதாவது முக்தி. இதுதானே நமக்கு வேண்டும். மானிடர்களாய்ப் பிறந்துவிட்ட அனைவரும் இதைப் பெற முடியும். அதுவும் மானிடப்பிறவியில் மட்டுமே முடியும். வேறு பிறப்பில் ஆகாது. இவ்வுண்மையை அறிந்து அறிவால் உணர்ந்து அவ்விறைவனடி சேர்ந்து இன்புறும் நிலைக்கு இன்றே இப்போதே நம்மை ஆயத்தப்படுத்திக் கொள்ளுதலே உயர்வான தூய்மையான அறிவாகும்.

விளங்கட்டும் அறிவு. வெல்லட்டும் அறிவு.



# கேள்விக்கு என்ன பதில்?

திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

1. இட்லி, தோசையைப் போற்றக்கூடியப் பெரும் வைணவத்தலங்கள் எது?
2. உப்பு இல்லாத பதார்த்தம், பகவானுக்குப் படைக்கும் தலம் எது?
3. கோரைக் கிழங்கை பக்குவமாக சமைத்து, சமர்ப்பிக்கும் தலம் எது?
4. திராவிட வேதம் என்பது எது?
5. வீராணம் ஏரி யாரால் உருவாக்கப்பட்டது?
6. பதினெட்டின் பெருமையை எடுத்துக் காட்டிய வைணவப் பெரியார் யார்?
7. வைணவர்களே இல்லாத ஒரே வைணவத்தலம் எது?
8. நவ திருப்பதிகள் உள்ள ஒரே மாவட்டம் எது?
9. எண்ணைக் கிணறு உள்ள திருத்தலம் எது?
10. பகவானுக்குப் பல்லாண்டு பாடிய திருத்தலம் எது?
11. எந்த வகை "மீன்" மச்சாவதாரமாக உள்ளது?
12. வஜ்ர தீபம் என்பது என்ன?
13. எந்த ஆழ்வாரின் அமுத வாக்கில் நலம் தரும் மாதம் காணப்படுகிறது?
14. இலங்கையை அழித்தது எது?
15. லவ குசலவர்களுக்கு உள்ள ஒரே தலம் எது?
16. இதிகாசம் நிகழ காரணமாக இருந்த இருவர் யார்? யார்?
17. மூன்று வகை ஆராதனங்கள் என்னென்ன?
18. நான்கு வகைப் பிறப்புகள் எது?
19. ஐந்து வரத க்ஷேத்ரம் எது?
20. ஆறு மதங்கள் எவை? எவை?
21. நலம் தரும் ஏழு யாது?
22. அஷ்ட பந்தனம் என்றால் என்ன?
23. ஆலய அமைப்பின் சூட்சும எண் என்ன?
24. அத்தத்தின் பத்தாம் நாள் எது?
25. ஆதிகாலத்தில் மது எப்படி செய்யப்பட்டது?
26. எந்த ராகத்தைப் பாடினால் குழந்தையின் அழுகை நின்றுவிடும்?
27. வாத நோய் தீர்க்கும் ராகம் எது?
28. விரும்பக்கூடிய மூன்று எவை?
29. இராவணன் தன் சிம்மாசனத்தில் எந்த மானின் தோலை வைத்திருந்தான்?
30. கண்ணன் ஆடிய ஆட்டத்திற்கு என்ன பெயர்?
31. சித்தர்கள் காட்டிய வழி எது?
32. மாங்கல்ய பலம் எவ்வாறு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது?
33. வாழ்க்கை ஒளிபெற எவ்வகை விளக்கு ஏற்ற வேண்டும்?
34. ஐந்து வேலி நிலப்பரப்பில் திருக்கோவில், ஐந்து வேலி நிலப்பரப்பில் திருக்குளம், ஐந்துவேலி நிலப்பரப்பில் ஓடை உள்ள ஒரே திருத்தலம் எது?

(40-ஆம் பக்கம் பார்க்க)

# பிரகலாதன் காட்டும் திருமாலின் சிறப்புகள்

திரு. ச. முத்துச்சாமி புததூர்.

முன்னுரை :

இதிகாசங்களும் புராணங்களும் மக்களை மகிழ்விப்பதற்காகவும், நல்வழிப்படுத்துவதற்காகவும் எழுந்தவை. இவை இறைவனின் தொடர்பான செய்திகளையே பேசுகின்றன. இதிகாசம் என்பதற்குக் காவியம் என்பது பொருள். புராணம் என்பதற்குப் பழங்கதை என்பது பொருள். இதிகாசங்களும், புராணங்களும் பன்னெடுங்காலமாக மக்களால் வழங்கப்பெற்றுவருகின்ற கதைகளின் தொகுப்பே ஆகும். இவற்றின் காலப்பழமையை யாராலும் அறுதிட்டுக் கூறஇயலாது. இராமாயணமும் மகாபாரதமும் தமிழில் உள்ள இதிகாசங்கள் ஆகும். பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற்புராணம் போன்றவை புராணநூல்கள் ஆகும்.



### கிளைக் கதை

இதிகாசம், புராணம் இரண்டும் ஒரு தன்மையனவே. புராணம் அளவில் சிறியது. இதிகாசம் அளவில் பெரியது. புராணம் கிளைக்கதைகளுள் சிலவற்றை மட்டும் கொண்டிலங்குவது. இதிகாசம் கணக்கற்ற கிளைக்கதைகளின் பிணைப்பாக விளங்குவது. ஒவ்வொரு புராணமும் ஒரு நீதியை உணர்த்த எழுந்தது. இதிகாசம் பல அறங்களைத் தன்னகத்தே கொண்டது. இராமாயணத்திலும் பாரதத்திலும் எண்ணற்ற கிளைக்கதைகள் இணைந்துள்ளன. அதில் இராமாயணத்தில் வரும் கிளைக்கதை இரணியன் வதைப்படலம் ஆகும். அதில் பக்த பிரகலாதன் காட்டும் திருமாலின் சிறப்பை இக்கட்டுரையில் காண்போம்.

### இரணியன் பெருமை

பஞ்சபூதங்களுக்கு எவ்வளவு வலிமையுண்டோ அத்துணை வலிமைகளையும் இவன் ஒருவனே பெற்றுத் திகழ்ந்தான் இந்த அண்டத்தில் மட்டுமின்றி ஏனைய அண்டங்களிலும் இரணியன் நாமமே துதித்துப் போற்றப்படும் அளவிற்கு வாழ்ந்து வந்தான். அவனுடைய பெருமையைக் கம்பர் கூறுமிடத்து

"வேதம் கண்ணிய பொருளெல்லாம்
விரிஞ்சனே ஈந்தான்
போதம் கண்ணிய வரமவன்
தரக்கொண்டு போந்தான்
காதும் கண்ணுதலோன் அயன்
கடைமுறைகாணுப்

பூதம் கண்ணியவலியெலாம் ஒரு
தனி பொறுத்தான்

என்று கூறுகிறார்.

## இரணியன் மகன் பிரகலாதன்

இரணியன் மகனான பிரகலாதன் தந்தைக்கு முற்றிலும் மாறுபட்டவனாக இருந்தான். எல்லோரைக் காட்டிலும் அறிவுடையவனாக விளங்கினான். மறையினுந் தூயவனாய் விளங்கினான். எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் அருளாளன். ஒப்பற்ற ஞானம் உடையவன். அற ஒழுக்கத்திற்குத் தலைவன்.

## குருவும் பிரகலாதனும்

தேவரும் பிறரும் அஞ்சி வணங்கும்படியாக வாழ்ந்த இரணியன் தன் மகனுக்கு வேதம் ஓதுவிக்க குருவை ஏற்பாடு செய்தான். குரு, பிரகலாதனிடம் உன் தந்தையின் நாமமாகிய "இரணியாய நம" என்று கூறச்சொன்னான். பிரகலாதன் மறுத்தான் பிரகலாதன் "நாராயணாய நம" என்று கூறி ஞான நாயகனை நினைத்தவாறே,

"ஓ நமோ நாராயணாய வென்று
ரைத்துளமுருகித்
தான மைந்திரு தடக்கை யுந்
தலைமிசைத்தாங்கிப்
பூநிறக்கண்கள் புனலுக
மயிர்புறம் பொடிப்ப
ஞானநாயகனிருந்தனனந்-
தணன் நடுங்கி"

மெய் மறந்திருந்தான்.

## பிரகலாதனின் மறுமொழி

குரு மீண்டும் பிரகலாதனிடம் "இரணியாய நம" என்று கூறச் சொன்னார். அதற்கு பிரகலாதன் 'என் மனம் நான்குவேதங்களும் அறுதியிட்டுச் சொல்லியிருக்கின்ற எல்லாப் பொருட்களுக்கும் எல்லையாகி நின்றவனான நாராயணனால் ஆட்கொள்ளப்பெற்றுள்ளது. எம்பெருமானது திருநாமத்தைக் காட்டிலும் பெருமை பெற்ற வேறு சொல் எதுவுமில்லை. அரிய வேதங்கள் உணர்ந்த அந்தணர்கள் கூறும் கடவுளின், உபநிடதங்கள் ஆராய்ந்து சொல்லும் பரம்பொருளின், தேவர்களும் முனிவர்களும் பிறரும் சொல்லுகின்ற அந்தப் பரம்பொருளின் திருநாமத்தையே நான் சொல்லுகின்றேன்.

"ஆரைச்சொல்லுவதந்தணரரு
மறையறிந்தோர்
ஓரச் சொல்லுவதெப்பொருளுப
நிடதங்கள்
தீரச் செய்வினை தேவரும்
முனிவரும் செப்பும்
பேரைச் சொல்லுவதல்லது
பிறிது மொன்றுளதோ"

என்றான்.

## குரு இரணியனிடம் சொல்லுதல்

பிரகலாதன் மறுமொழிகளைக் கேட்ட குரு இரணியனிடம் சென்று நிகழ்ந்ததைக் கூறினான். உடனே இரணியன் பிரகலாதனை அழைத்து 'நமக்குத்தகாததும், முன்பு எவரும் சொல்லும் முறைக்கு மாறுபட்டதுமான அப்புதுமையான சொல் எது? விரைவினில் கூறுக' எனக் கேட்டான். பிரகலாதன் நாராயணனின் எட்டெழுத்துப் பெருமைகளை விளக்கினான்.

## எட்டெழுத்தின் பெருமை

"விரும்பிய உறுதிப்பொருள்களைத் தருவது, வீடுபேறு அடைய உதவுவது அந்த ஒப்பற்ற திருமாலின் திருப்பெயரே யாகும். அத்திருப்பெயர் "நமோ நாராயணா" என்பதாகும். பூ உலகிலிருந்து, மேலே தாமரை மலரில் வாழுகின்ற பிரம்மனுடைய சத்தியலோகம் வரையிலும் வாழ்கின்ற ஐம்பெரும்பூதங்களில் நிற்பன, இயங்குவன ஆகிய அனைத்துப் பொருள்களிலும் உள்ளே நிறைந்துள்ளது இவ்வெட்டெழுத்து மந்திரமே யாகும். முக்கண்ணோடு விளங்கும் சிவபெருமான் நான்முகனாகிய பிரமன் முதலாக மானிடர் வரையில் இம்மந்திரத்தை மறந்தவர் உயிரோடு இருப்பினும் நடைப்பிணமே யாவர். ஞானிகள் இதன் பெருமையை நன்கு உணர்ந்துள்ளனர். ஞானமில்லாதவர் இவ்வுண்மையை அறியார்."

"பிறவி என்னும் பழவினைச் சூழலிலிருந்து உயிர்களை முத்திக்குக் கொண்டு சேர்க்கின்ற சிறந்த மரக்கலம் இவ்வெட்டெழுத்து மந்திரமேயாகும். எல்லோர்க்கும் அடைதற்கரிய அருமையான அரிய அருங்கலன். இனிமையான மங்கலமொழி. முக்காலம் உணர்ந்த முனிவர்கள் நான்மறைகளின் மூலமாகத் தேர்ந்தெடுத்த உண்மையான சிந்தாந்தம் இதனைத் தவிர வேறு எதுவுமில்லை. உன்னுயிர்க்கும் என்னுயிர்க்கும் இவ்வுலகத்திலுள்ள பிற உயிர்க்கும் " ஓம் நமோநாராயணாய" என்னும் இந்திருநாமமே சிறந்தபயனை அளிக்க வல்லது" என்று எட்டெழுத்தின் பெருமைகளை பிரகலாதன் தன் தந்தை இரணியனுக்கு எடுத்துரைத்தான்.

## இரணியனின் மறுமொழி

'மிகப் பழங்காலந்தொட்டு இன்றுவரை ஏகச் சக்கிராதிபதியாக விளங்கும் என் ஆட்சியில் நீ இந்த நாமத்தை உரைத்தாய். எல்லோருக்கும் முன்னவரான மும்மூர்த்திகளும் தேவர்களும் முதலாக மூன்று உலகங்க

ளிலும் உள்ள எல்லோரும் என் திருவடிகளையே எண்ணுவார கள். என் திருநாமத்தையே உசச ரிப்பார்கள். எனககு அருசி திரு மாலே பாற்கடலில் ஒடி ஒளிந தான். எல்லா உயரதிணை, அஃறிணைப் பொருள்களுக்கும் உல கங்கள் அனைத்திறகும தலை வன் நானே. படைத்தல், காத தல், அழித்தல் என்று கூறப் படும் முத்தொழில்களை புரிய தகுதி வாய்ந்தவனும் நானே" எனச் செருக்குடன் பேசினான். அவனுக்கு மறுமொழியாக பிர கலாதன் திருமாலின் சிறப்புக் களை எடுத்துக்கூறினான்.

## நாராயணனே பரம்பொருள்

"நாராயணனே பரம்பொருள். தோன்றி மறையும் இவ்வுல குக்கு மூலம் ஒன்றுண்டு என் பதை நிறுவ,

"வித்தின்றி விளைவதொன்-
றில்லை வேந்த நின்
பித்தின்றி யுணர்தியேல
ளவைப் பெய்தனன்
உய்த்தொன்று மொழியின்றி
உணர்தற்பாற்றெனாக்
கைத்தொன்று நெல்லியங்-
கனியிற் காண்டியால்"

("கையிடத்து உள்ள நெல் லிக்கனி நன்கு விளங்குவது போன்று இறைவனை நன்கு உணர்க") என்றான்.

"பரம்பொருளினின்றே பிரபஞ் சங்கள் தோன்றின. அவற்றி னுள் அவனே தங்கி அனைத் தையும் இயக்குகிறான். அவன் காலத்துக்கு உட்படாதவன். மாற்ற முடியாதவன்."

"தன்னுள்ளே உலகங்கள்
எவையும் தந்தவை
தன்னுள்ளே நின்று தானவற்றுள்
தங்குவான்
பின்னிலன் முன்னிலன் ஒருவன்
பேர்கில்லன்
தொன்னிலை யொருவரால்
துணியற்பாலதோ"

என்கிறான்.

## திருமாலின் இயல்புகள்

"எண்ணுவாருடைய எண்ணத திறதும எட்டாமல கடந்து உள ளவன. நிகரறறவன். குணஞ் செயலகளால் வரையறுககபபட டாதவன். காணபவர்களுடைய கண்களிலும் மறைந்துள்ளான். ஞானததின் வடிவானவன். தன் னைக் கண்டு பிறருக்கு எடுதது ரைக்கும் ஞானிகளின் மனத்தில் நிறைந்துள்ளவன். பூமியிலும் நீர் நெருப்பு காற்றிலும் 'அந்தர் யாமியாய் மறைந்து நிற்பவன்'

'கண்ணினும் கரந்துளன் கண்டு
காட்டுவான்
உள்நிறைந்திடுமுணர்வாகி
உண்மையால்
மண்ணினும் வானினும் மற்றை
மூன்றினும்
எண்ணினும் நெடியவன் ஒருவன்
எண்ணிலான்

என்றான்.

பிரமனுடைய உயிர், மற்றும் அனைத்து உயிர்களும் திருமா லின் நாபித்தாமரையிலே தங் கியுள்ளன என்பதைப் பிரகலா தன் விளக்குகிறான்.

"எழுத்தியன் நாளத்தின்
எண்ணிலாவகை
முழுத்தனி நான்முகன் முதல
மற்றுயிர்
வழுத்தரும் பொகுட்டதோர்
புரையின்வைகுமால்
விழுத்தனிப்பல்லிதழ்
விரையிலாமுகிழ்

என்றான்.

## திருநாமச் சிறப்பு

"காமமும் கோபமும் முதலான தீக்குணங்களையும் அவற்றின் ஆற்றலையும் தன்னைச் சரண மடைந்தவர்களிடமிருந்து ஒழிக் கின்றவன. பிறநககு வருநதந தாராது பாதுகாததலில வல் லவன. அவனுடைய திருநா மங்களின் பெருமையினை எவ ராலும் சொலலி முடிகக முடி யாத அளவு உயரநதது".

"காமமும் வெகுளியும் முதல
கன்னிய
தீமையும் வன்மையும் தீர்க்கும்
செய்கையால்
நாமமும் அவன் பிறவி
கொடர்நெடுஞ்
சேமமும் பிறர்களாற்
செப்பற் பாலவோ"

"திருமாலின் திருநாமச் சிறப்பும், உயிர்களைப் பாதுகாககும் தண் ணளிச் சிறப்பும் [illegible]வராலும் அளவிட்டுரைக்க முடியாத அள விற்கும் பெருமையு[illegible]யது."

## ஆலமும் வித்தும்

"பெரிய ஆலமரமும் அப்பெ ரிய ஆலமரம் உள் அடங்கப் பெற்ற அதன் சிறிய விதையும் போன்று மிக நுட்பமானவன் ஒருவினையைச் செய்வதற்கு ஏற் றகாலம், கருவி, இடம் அதன் பயன், அப்பயனைத் துய்க் கின்ற உயிர் அனைத்தும் அவ னேயாவான். நல்லொழுக்க மாயும் அவை விளைவிக்கின்ற இம்மை, மறுமை செல்வங்களா யும் விளங்குபவன் திருமாலே யாவான்."

"காலமும் கருவியும்
இடனுமாய்க் கடைப்
பாலமை பயனுமாய்ப் பயன்
துய்ப்பானுமாய்ச்
சீலமும் அவைதரும் திருவுமாயுளன்
ஆலமும் வித்துமொத்து
அடங்கும் ஆண்மையான்"

உலகம் எம்பெருமானது திருவு ருவமாயும், அதன் பயனாயுமே விளங்குகின்றது."

## அறிவினுக்கு அறிவுமாயினான்

"ஓம் என்னும் பிரணவத்தில்

முதன்மையான அகாரம் என்னும் உயிரெழுத்தின் பொருளால் விளங்குபவன். ஞானத்துக்கும் ஞானமாயுள்ளவன். மூவுலகிலும் பரந்து நிற்பவன். புகையும் நெருப்பும் போல ஒருங்கே பல இடங்களிலும் பரவுந் தன்மையுடையவன்."

"ஓமென்னும் ஓரெழுத்து
அதனின் உள்ளுயிர்
ஆமவன் அறிவினுக்கு
அறிவுமாயினான்
தாமமூவுலகுமுந்தழிவிச்
சார்தலால்
தூமமும் கனலும் போல் தொடர்ந்த
தோற்றத்தான்"

### உள்ளுற உணரும் ஓசையான்

"ஒப்பற்ற இசையையுடைய வீணையினின்று எழும் ஓசை போல் இனிதாக உள்ளுணர்வுக்குப் புலனாகின்றவன் திருமால். அத்திருமால் எல்லாப் பொருள்களிலும் உள்ளிலும் உளான். புறத்திலும் உளான். ஆனால் அவற்றின் இயல்புகள் தொடரப்பெறான். சிறந்த பிரமாணம் என்று ஏற்றுக்கொள்ளப்படுகின்ற வேதங்களும் அவனை உள்ளபடி உணராது மயங்கும் படியான தன்மையன்." இதை

"உள்ளுற உணர்வினிதுணர்ந்த
வோசையோர்
தெள்விளியாழிடைத்தெரியுஞ்
செய்கையான்
உள்ளுளன் புறத்துள்ன் ஒன்றும்
நணணலான்
தள்ளருமறைகளும் அருளும்
தன்மையான்

என்றவாறு இறைவனின் இயல்புகளை எடுத்துக் கூறுகிறான்.

### உலகு தந்தவன் அரியே எனல்

"உலகங்களைப் படைத்தவனும், பல்வேறு உயிர்களைப் படைத்தவனும், அவ்வுயிர்களிலே பொருந்தி விளங்குகின்றவனும், மலரில் மணமும், எள்ளில் எண்ணெயும்போல் எங்குமுள்ள அளவிலாத பொருள்கள் அனைத்திலும் கலந்து நிறைந்திருக்கின்றவன் திருமாலே."

"உலகுதந்தானும் பல்வேறு
உயிர்கள்தந்தானும் உள்ளுற்று
உலவிலா உயிர்கள் தோறும்
அங்கங்கே உறைகின்றானும்
மலரில் மணமும் எள்ளில் எண்ணெயும்
மற்றும் கேளாய்
அலகில்பல்புகழும் பற்றி
முற்றிய அரிகாண் அத்தா"

"சாத்துவீகம், ராசசம், தாமசம் என்னும் முக்குணங்ளைக் கொண்டவன். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களை உடையவன். பிரம்மன், விஷ்ணு, ருத்திரன் என்னும் மூன்று உருவங்களையும் கொண்டவன். சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்று சுடர்கள் அவன்தம் கண்கள்."

"மூன்று அவன் குணங்கள் செய்கை
மூன்று அவன் உருவம் மூன்று
மூன்றுகண் சுடர்கொள்சோதி
மூன்று அவன்உலகம் மூன்று
தோன்றலும் இடையும்ஈறும்
தொடங்கிய பொருள்கட்கெலாம்
சான்றவன் இதுவே வேதம்
முடிவுஇது சரதம் என்றான்"

### இரணியன் வதைபடல்

பிரகலாதன் இரணியனுக்கு திருமாலின் சிறப்புகளை எல்லாம் எடுத்துக்கூறுகிறான். அதற்கு 'உன் திருமாலை எனக்குக் காட்டு. இதோ இத்தூணில் உளனா' என்றான். 'எம்பெருமான் திருமால் தூணிலும் உள்ளான் துரும்பிலும் உள்ளான்' என்றான் மகன். இரணியன் தூணைக் கதாயுதத்தால் தாக்க நரசிங்கமூர்த்தி உருவம் வெளிப்பட்டது. இரணியன் வதை செய்யப்பட்டான்.

### பேதமின்மை

பிரகலாதனுக்கு திருமால் காட்சி தருகிறார். தனக்கும் பிரகலாதனுக்கும் எந்தவிதப் பேதமும் இல்லை என்பதை

"நல்லறமும் மெய்மையும்
நான்மறையும் நல்லருளும்
எல்லையின் ஞானமும்
ஈறிலா எப்பெருளும்
தொல்லை சால்எண் குணனும்
நின்சொல்தொழில்செய்க
வல்ல வுரு ஒளியாய்
நானா வளர்க நீ"

என அருளிச்செய்தான்.

### முடிவுரை

கம்பர் தன் காப்பியத்தில் கிளைக் கதையாகிய இரணியன் வதைப்படலத்தில் பிரகலாதன் வாயிலாக திருமாலின் சிறப்புக்களையும், எட்டெழுத்தின் பெருமைகளையும் விளக்குகிறார். நாமும் 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மந்திரத்தை நாள்தோறும் ஓதி வாழ்வில் வளம் பெறுவோமாக!





# அனுமன் கண்ட விஸ்வரூபம்

திரு. வெ. தெய்வசிகாமணி - தில்லி.

சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்க்கும் பழமையாகவே உரிமை பூண்ட தமிழகமானது குடபுலம், குணபுலம், தென்புலம் என மூவகையாகப் பகுப்பு உடைத்திருந்தது. இவற்றுள் குடபுலம் சேரர்க்கும், குணபுலம் சோழர்க்கும், தென்புலம் பாண்டியர்க்கும் உரியவை ஆயின. குடபுலமென்பது, குட்டம், குடம், பூழி முதலிய மேற்கடல் பகுதிகளையும், பன்றி மலாடு முதலிய உட்பகுதிகளையும் கொண்டது. குடபுலமே இன்று கேரளம் என அழைக்கப்படும் பரசுராம க்ஷேத்திரமாகும். செந்திறத்தமிழ் ஓசையும் வடமொழிச் சொல்லும் கலந்த மலையாள மொழி பேசுமிடம்.

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட 108 திவ்ய தேசங்களில், மலைநாட்டுத் திருப்பதிகள் எனப்படும் 13 திவ்ய க்ஷேத்திரங்கள் கேரளத்தில் உள்ளன. இவற்றைத் தவிர இறை உறை கோவில்கள் எண்ணற்றவையுள்ளன. இவற்றுள் ஒன்று மேற்குக் கடற்கரை ஓரத்தில், சென்னை-மங்களூர் ரயில் பாதையில், கோழிக்கோட்டிற்கும் (Calicut) கண்ணூருக்கும் (Cannoor) நடுவேயுள்ள 'தலைச்சேரி' எனும் ஊரின் கண் "திருவங்காடு" என்றழைக்கப்படுமிடத்தில் அமைந்துள்ளது. ஸ்ரீராமன் அம்பலம் என்ற ஸ்ரீராமர்கோவில். தலைச்சேரி ரயில் நிலையத்திலிருந்து சுமார் 2 அல்லது 3 கிமீ. தூரமுள்ள இந்த க்ஷேத்திரத்திற்குப் போகும் வழியெல்லாம்

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

# விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒனறு ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப்பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மண்ணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள, ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவற்றின் சம்பந்தமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும், உரைக்கோவைகள, கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துக்களும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயர்ப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இந்த மையத்தின் பெரு முயற்சியாக அமையும். நவீன அசசகம் ஒன்றினை நிறுவும் எண்ணமும் மேலாண்மையின் பரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும, தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழ்ந்திடவே மேலாண்மை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத் தாராளமான நன்கொடை அல்லது நூல்கள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனங்களையும் மேலாண்மை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப்பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மற்றும் தத்துவங்கள் பற்றிய அரிய நூல்கள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொள்ளப்படுகிறுர்கள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூல்கள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறப்பு தனி அலுவர் (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்

நீண்டுயர்ந்த மரங்களும், சுதத மான காற்றும், சூல் அடிப்பலா மரங்களும் (வேர்ப்பலா), வான உயர் மலைக்குன்றும், விள்ள விட்ட நாண்மலர்ச்செறிவும் பிறவும் நிறம்பியுள்ளன. வேத மணம் கமழும் அமைதியான இடம்.

எணகுணத்தான. எணதிசையும் ஆளுடையான, தசரதன் தன் மாமதலை, பூதநாயகன், நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன், அப்பூமேல் சீதை நாயகன் வேறு உள தெய்வநாயகன், வேதநாயகன், மேல் நின்ற விதிக்கு நாயகன் என்றெல்லாம் அழைக்கப்படும் ஸ்ரீராமன் புவியில், நால தடந்தோளன' என்ற சதுர்புஜராமனாய், சீதா, லெக்ஷ்மண, அனுமத சமேதராய் காட்சியளிககிறுர். கேரள மாநிலத்திற்கே உரிய கோவிலமைப்பு. கிழக்குப் பார்த்த வாசல். கருணை பொழிகிற கண்களையுடைய மங்கள ஸ்வரூபர்களை வருணிக்க வார்த்தைகள் போதா. சர விளக்குகளும், வெங்கல விளக்குகளுமாய் நிரம்பியுள்ளன. கரணை வதம் செய்த சதுர்புஜ இராமன் இவரே எனக்கூறுகின்றனர். மூலவர்களும், உற்சவ மூர்த்திகளும் ஏனைய கோவில்களைப்போலவே அமைந்திருக்கின்றன. ஆனால் இங்கு அனுமன் இருக்குமிடம் மாறுபட்டு இருக்கிறது. அனுமன் கர்ப்பகிருஹத்திலிருந்து சற்று வெளியே இருக்கிருர்.

"ஹே, அனும, உனது உபகாரத்தால் ஸ்ரீராமனிடம் சுகரீவனை அறிமுகப்படுத்தி, அவன் அரச பதவி அடைய உதவினாய்" (तुम उपकार सुग्रिवहिं किन्हा । राम् मिलाया राज पत तीनहा ।।) என ஸ்ரீ துளசீதாஸரால் ஹனுமத் சாலீஸாவில் வர்ணிககப்பட்டவரும், ஆற்றலின் உறைவிடமாகியவரும, அஞ்சனபுததிரனும், அப்பு (நீர), வாயு (காற்று), தேயு (நெருப்பு), ஆகாயம் (விண), ப்ருத்வீ (மண) என்ற ஐம்பூதஙகளுடன நெருங்கிய தொடரபுடையவரும், மிகுந்த பராக்ரமஸாலியும், நித்ய ப்ருமமசசாரியும், கீர்த்திமானும், நற்குணங்கள் பொருந்தியவரும், ஞானத்தின் உச்சநிலையை அடைந்தவரும், மரணத்தை வென்று சிரஞ்சீவி பட்டம் பெற்றவரும், லக்ஷ்ய புருஷரும், இராம லெக்ஷ்மண சீதா பரதன் முதலியோர்களால் பெரிதும் போற்றப்பட்டவருமான இந்த "தாழ்வதன நாப்பன்" (ஆம்பல் விரிந்தாலன்னச் சிரிப்பனாகிய அனுமன்) இந்த க்ஷேத்திரத்தில் இராமருடைய சந்நிதிக்குள்ளேயே இருந்தாலும் கர்ப்பக்ருஹத்திற்கு வெளியே, நின்றநிலையிலோ அமர்ந்த நிலையிலோ அல்லாமல் பாதி ஒடியும், பாதி நின்றுமாக, ஒரு சிறு குழந்தையானது அடிக்கவரும் தன் தாயை பயத்துடனும் பாசத்துடனும் பார்க்கும் பார்வையுடன் ஐயனைப் பின்னோக்கிப் பார்த்துக் கொண்டிருக்கிருர். 'வகை நின்று உயரதாள் நெடுமாருதி' (அழகான ஓங்கி நின்ற கால்களையுடைய ஹனுமன்) இவ்வாறு பயந்த முகத்துடனும் கூப்பியகரங்களுடனும் கர்ப்பக்ருஹத்திற்கு வெளியே நிற்பது மற்றைய இராம சந்நிதிகளிலிருந்து மாறுபட்ட ஒன்று. வேதங்களின் கூற்றுப்படி தானே வாழ்ந்துகாட்டிய பொறுமையின் சிகரமாகிய இராமன், கடலைககடந்து இலங்கை அடைந்தவுடன் அங்கதனை தூது அனுப்புகிருர். கடல் கடக்கும் முன், முதல் தூதுவனாக அஞ்சனைக்கொரு சிறுவனாம் அனுமன் அனுப்பப் படுகிருர. அங்கதன தூது இரணடாவது. அங்கதனை அரசவையில் பார்த்த அரக்கர்கள் நடுங்கி "அழுகின்ற கண்ணர்" ஆகி, 'அனுமன கொல' என அஞ்சிததுடிக்கின்றனர்.

அனுமனது ஆற்றல், அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த கம்பராமாயணத்தில்,

"விற்பெரும் தடந்தோள் வீர,
வீங்கு, நீர் இலங்கை வெற்பில்,
நற்பெரும் தவத்தாலாய நங்கையைக்
கண்டேன் அல்லேன்,
இற்பிறப்பு என்பதொன்றும், இரும்-
பொறை என்பதொன்றும்,
கற்பு எனும் பெயரது ஒன்றும்,
களிநடம் புரியக்கண்டேன்"

என்ற செய்யுளிலிருந்தும்,

"உன் புகழ் உன்னதாக்கி, உயர்-
புகழ்க்கு ஒருத்தி ஆய,
தன் குலம் தன்னதாக்கி, தன்னை
இத்தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக்கு ஈந்து,
வானவர் குலத்தை வாழ்வித்து,
என்குலம் எனக்குத் தந்தாள்;
என் இனிச்செய்வது எம்மோய்"

என்ற செய்யுளிலிருந்தும் நன்ருக அறியலாம்.

இவ்வாறெல்லாம் புகழப்படும் நம்பன் (அனுமன்) இங்கு இவ்வாறு காட்சியளிப்பதைப் பற்றி விசாரிக்கிறோம். நம்பூதிரி கூறுகிருர்.

"இராமனிடம் அண்ணல் மாருதி, 'ஐயனே அடியவன் தங்களை எப்பொழுதும் இராமனாகவே பார்க்கிறேன். தங்களுடைய விஸ்வரூப சேவை காட்டி அருள வேண்டுகிறேன்' என, இராமனோ அதற்கு - 'பாழி பனைதோள் வீர , என்னை இராமனாகவே நீ பார், அது போறும்' என்கிருர். மாரு

தியோ விடாப்பிடியாக இருக் கின்ருர். வேண்டி நின்ருல் தாண்டிவரும் கொற்றவனன்ருே அவன்! அனுமனின் வேண் டுகோளை நிராகரிக்க முடிய வில்லை. செவிக்குத் தேன் என இராமன் புகழினைப் பருகும் கவிக்கு. நாயகனான ஆண்த கைக்கு விஸ்வரூப சேவை கிட் டுகிறது. "திருவெங்காடு" என் னும் இத்திவ்யக்ஷேத்திரததில் - எவ்வாறு?

பல ஆயிரக்கணக்கான சூரி யர்களின் ஒளி ஒருமிக்க உதித் தால் எவ்வாறு இருக்குமோ அவ் வாருன ஒளியுடனும், பல உலகங்களுமாய், சங்கு, சக் ரம், வில், வாள், கதை ஏந் தியும், மிக அதிகமான வெப் பத்துடனும், சந்திர சூர்யர்க ளைக் கண்களாகவும், வெண்த மூல் வாயுடனும், விண்ணை யும் மண்ணையும் நிறைத்தும், ஊழித்தீக்கு ஒப்பான பலமுகங் களுடனும், கோரப்பற்களுடனும் கூடிய "விஸ்வ ரூப"மெடுக்கிருர் ஸ்ரீராமர். தேவர்களையும், ரிஷி களையும், எமன், வாயு, அக்னி, இந்திரன், சிவன், பிரும்மா முத லியோரையும் அனுமன் காண் கிருர். தேனே மலரும் திருப்பா தத் தாமரையையோ, திருமுடி யையோ இடையையோ பார்க்க முடியவில்லை. உலகில் எல் லாமே நாராயணனின் செயல், எப்பொருளும் அவன் படைப்பு. உலகு எல்லாம் அவன் ஸ்வ ரூபம். அவன் முகங்க ளும், கைகளும், கண்களும் மற் றைய அவையவங்களும் கணக் கிலடங்கா, அவனுக்கு ஒப்பு யாருமில்லை. ஒப்பிலாதவன். ஒப்பிலியப்பன் இவ்விறை வன் அருளால் இயற்கையின் நடைமுறை நன்ருக நடக்கிறது. அவனுக்கு இவை யாவை யும் ப்ரத்யக்ஷமாகத் தெரிந்தன. பயமென்ருல் என்ன என்பதை அறியாதவனாகிய அஞ்சனபுத திரன், விஸ்வரூப சேவையைப் பார்த்துப் பயந்து கலங்குகிருர். இதேபோனறு பின்பு குரு க்ஷேத்திர்ததில் தெய்வ நியதி யின் இரகசியங்களைச் சொல்லி அர்ஜுனனுக்கும் தன் விஸ்வ ரூப சேவை கிடைக்கச்செய்கி ருர், எல்லாவற்றிற்கும் மூலகார ணமான நாராயணன். அர்ஜு னனும் அனுமனைப் போலவே கலங்குகிருன். உலகிலுள்ள மற் றவையாவும் கலங்குவதாக அவ னுக்குப் படுகிறது. அர்ஜுன னும், அனுமனும் கார்நிற அண் ணலின் சாந்தஸ்வரூபத்தை மட் டுமே கண்டு களித்தவர்க ளன்ருே! "மாணியாய் உலக ளந்த நாள் (மாணி=பிரும்மச் சாரி-வாமனர்), அவ னுடைய வடிவை ஆணியாய் (ஆணி=ஆதாரம்) உணர்மாருதி அதிசயமுற்று, 'எண்ணிலா வடி வங்களையுடைய பரம்பொருளே, உனது இப்பெருமையை யான றியவில்லை. என் மனம் பயத் தால் நடுங்குகிறது. இராமா, உன்னை, இராமனாகவே காண விரும்புகிறேன்' என்று கூறிக் கொண்டே கர்ப்பக்ருஹத்திலி ருந்து வெளியே ஓடி வருகிருர். தஞ்சம் என்ருேரைத் தாங்கும் தன்மையான், 'அனும, நீ ஓட வேண்டாம், என்னை மறுபடி யும் பார்' என்று, கூறி உருப்பெ றக்காட்டி நின்று, 'நான் உனக்கு அபயம் அளித்தேன்' என்கிருர். பாதி ஓடியும், பாதி நின்றும் பயத்துடனும், தாயின் குரல் கேட்ட கன்றுபோலவும், குழந் தையின் பார்வையுடனும் தன் ஓரக்கண்ணுல் பின்புறம் பார்த் துக்கொண்டு அஞ்சலி ஹஸ்த னாய் நிற்கிருர் இந்த அனு மன்".

கோவிலைச் சுற்றி வலி மையான மதில்கள் உள்ளன. மூலஸ்தானத்தில் செப்போடு வேய்ந்திருக்கிறது. சிததிரை விஷு எனப்படும் வருடப் பிறப்பு இங்கு மிகவும் விசேஷ மாகக் கொணடாடப்படுகிறது.



## கௌடிபாய்

சரஸ்வதிபாய், துர்காபாய் என்னும் பெயர்களை நாம் அறிந் துள்ளோம். ஆனால் கௌடிபாய் என்னும் பெயரை நாம் கேட்டிருக்கிருேமா? இதோ கேளுங்கள். காசியில் கோயில் கொண் டிருக்கும் கௌடிபாய் காசி விசுவநாதரின் சகோதரி முறையினள். அவள் கௌடிபாய் என்னும் திருநாமம் கொண்டதே ஒரு விந்தை நாடகம். காசியில் விசுவநாதரின் திருமேனியை அனைவரும் தொட்டு வணங்குகிருர்கள். அபிஷேகம் செய்கிருர்கள். இச்செயலை கௌடிபாயின் உள்ளம் ஏற்கவில்லை. தருணம் பார்த்து ஒருநாள் தன் அண்ணனிடமே இதுபற்றி குறை கூறினாள். விசுவநாதருக்கு தங்கைமீது பரிவு பிறக்க வில்லை. மாருக சினமே பொங்கி எழுந்தது. "என் பக்தர்களை நீ அவமதித்துவிட்டாய். இனி சேரி வாழ்க்கையே உனக்குத் தகும்." என்று சீறினார். (சபித்து விட்டார்) தங்கை நெஞ்சம் பதறினாள். "அண்ணு! விமோசனம் என்ன?" என்று இறைஞ்சி நின்ருள். "என்னை வழிபடும் மக்கள் உன்னையும் வழிபடுவார்கள். அவர்களுடைய புண்ணியத்தில் கௌடி (சோழி) அளவு உனக்குக் கிட்டும். அதன்மூலம் உன் பாவம் குறையும். சாபம் மறையும்" என்று விசுவநாதர் விடை கொடுத்தார். அந்தநாள்முதல் காசியில் கௌடிபாய் கோயிலுக்கு மக்கள் சோழிபோடும் வழக்கம் தொடரந்து வருகிறது.

ஆர். சுப்பாராவ் - சென்னை.

# "வேத மாதா"

திரு. E. சம்பந்தாச்சார்யா - ஆவடி.



ஆன்மீகப் பெருவாழ்வை அடைவதற்கு அமைந்துள்ள மந்திரங்களுள் தலைசிறந்து விளங்குவது "காயத்ரீ" மந்திரமாகும். பிரம்மக ஞானத்தையும், தேஜஸையும், ஓஜஸையும், பலத்தையும் ஒருங்கே அளிக்க வல்லப் பெருமை வாய்ந்தது காயத்ரீ மந்திரம். காயத்ரீ மந்திரத்தைக் காட்டிலும் சிறந்த வேறொரு மந்திரம் இல்லையென்பது பாரமார்த்தீகப் பெருவாழ்வில் நீடு நிலைத்திருந்த நமது ஆன்றோர்களாகிய மகரிஷிகளின் கருத்து. காயத்ரீ மந்திரம் நமது தேசிய மந்திரமாகும். சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்.

"Gayatri is our National Mantra. Also it is the Monarch of Mantras"

இத்தகு உயர் சிறப்பினைப் பெற்றுத்திகழ்வது காயத்ரீ மந்திரமாகும்.

ரிக், யஜூர், சாம வேதங்களின் சாரமாகவும், பிரம்மக் ஞானத்தை அளிக்க வல்லதாகவும் உள்ள இச்சிறந்த மந்திரத்தைக் கண்டு உலகுக்கு உணர்த்தியவர் விசுவாமித்திர மகரிஷியாவர். நம்முன்னோர்களாகிய மகரிஷிகள் மிகுந்த சிரத்தையுடன் இதை அநுஷ்டித்து வந்ததால் அவர்கள் ஆன்மீக ஒளியும், அருட்சக்தியுடம் பெற்று, உலகினுக்கே ஒளியூட்டவல்லவர்களாகத் திகழ்ந்தார்கள் என்பது மறுக்கமுடியாத பேருண்மையாகும்.

எல்லா ஆசிரம நிலையிலுள்ள மாந்தர்கட்கும், இந்து சமயப் பல்வேறு பிரிவினர்கட்கும் பொதுவாக விளங்கும் உயர்சிறப்பினைப் பெற்றுள்ளதும், சமய சமரசத்தை நல்கும் நன்மதிப்பினைப் பெற்றுளளதும் ஆகிய ஒரே மந்திரம் "காயத்ரீ" மந்திரமாகும்.

வேதங்களின் ஆறு அங்கங்களில் "சந்தஸ்" என்பது ஒன்று. நமது வேதங்களில் பல "சந்தங்கள்" கூறப்படுகின்றன. அவைகளுள் காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தீ, த்ருஷ்டுப், ஜகதீ ஆகிய இவை ஒரு சில சந்தஸ்களாகும்.

சந்தஸ் வடிவமாக அமைந்தது காயத்ரீ மந்திரம். இது ரிக், யஜுர், ஸாமம் ஆகிய மூன்று வேதங்களையும் மூன்று பாதங்களாகக் கொண்டது. ஒவ்வொரு பாதத்திற்கும் எட்டு அக்ஷரங்களாக இருபத்து நான்கு அக்ஷரங்களையுடையது. பத்துப் பதங்களைக் கொண்டுளளது.

மூன்று பாதங்கள், பத்துப் பதங்கள், இருபத்திநான்கு அக்ஷரங்களைக் கொண்டு விளங்கும் பொழுது இது "ஸாவித்ரீ"

மந்திரம் எனப்படும். இது கீழ் வருமாறு:

"தத் ஸவிதுர் வரேண்யம்
பர்க்கோ தேவஸ்ய தீமஹி
தியோயோந: ப்ரசோதயாத்"

இம்மந்திரத்தின் முதலில் "பூர்ப் புவஸ்ஸுவ:" எனும் வ்யாஹ்ருதியைச் சேர்த்து கூறும்பொழுது இது "காயத்ரீ" மந்திரம் எனப் படும். ஒவ்வொரு மந்திரத்திற்கும் "ஓம்' ' என்பதை முதலில் சேர்த்து உச்சரிப்பது நியதியா தலால் காயத்ரீ மந்திரம் கீழ் வருமாறு உச்சரிக்கப்படும்.

"ஓம்
பூர்ப்புவஸ்ஸுவ:
தத் ஸவிதுர் வரேண்யம்
பர்க்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோந: ப்ரசோதயாத்"

இம்மந்திரத்தின் பொருளை அன்வயப்படுத்திக் கீழே நன்கு விளக்கப்படுவதை அறிவோமாக.

| | |
|---|---|
| ய: | : யார் |
| ந: | : நம்முடைய |
| திய | : புத்தி சக்தியை |
| ப்ரசோத-யாத் | : தூண்டுகிறரோ |
| தத் | : அந்த |
| தேவஸ்ய | : சுடர்ப்பரகாச |
| ஸவிது: | : கடவுளரான சூரியனின் |
| வரேண்யம் | : மிக உயர்ந்ததான |
| பர்க்க: | : ஒளியை (ஜோதிஸ்வ ரூபத்தை) |
| தீமஹி | : தியானிப்போமாக |

காயத்ரீயின் பொருள் சூரியன் என்றும், பிரம்ம, விஷ்ணு, ருத்திர சொரூபிணி என்றும், முடிவில் பரப்பிரம்மம் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆதலால் காயத்ரீ தேவியை மும்மூர்த்தி சொரூபிணியாக, ஸமஷ்டி சொரூப தியான சுலோகம் கீழ்வருமாறு நன்கு விளக்குகின்றது.

"முக்தா வித்ரும ஹேமநீல தவளச்
சாயைர் முகை: த்ரீக்ஷணை:
யுக்தாம் இந்து நிபத்த ரத்ன
மகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம்
காயத்ரீம் வரதாபயாங்குச கசா:
சுப்ரம் கபாலம் கதாம்
சங்கம் சக்ரமதாரவிந்த யுகளம்
ஹஸ்தைர் வஹந்தீம் பஜே"

காலையில் பிரம்ம சொரூபிணியாகவும், நண்பகலில் ருத்திர சோரூபிணியாகவும், மாலையில் விஷ்ணு சொரூபிணியாகவும் தியானித்தல் வேண்டும்.

ஸந்தியா வந்தனத்தில் முக்கிய அம்சமாக விளங்குவது காயத்ரீ மந்திர ஜெபமாகும். எனவே முதலில் ஸந்த்யா வந்தனத்தைச் செய்து, பிறகு காயத்ரீ மந்திரம் ஜெபம் செய்வதுதான் வேதசாஸ்திரவிதி முறையாகும். ஸந்தியாவந்தன கர்மாவும், காயத்ரீ மந்திர ஜெபமும் படிப்படியாக பிரம்மக்ஞானத்தையும், மோக்ஷ சாதனத்தையும் அளிக்கவல்லவை. பிரணவமும், வியாஹ்ருதியையும் சேர்த்து காயத்ரீ மந்திரத்தை ஜெபித்தால்தான் பூர்ண பலனை அடையமுடியும்; மந்திரமும் பூர்ண சித்தியாகும்.

தேவீ பாகவதம் ஏகாதச ஸ்கந்தம் பிரதம அத்தியாயம் முதல் சப்தம அத்தியாயம் வரை காயத்ரீ மந்திரததின் ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை, தத்வம், முத்திரை, சக்தி வர்ணம் இவைகளை விளக்கமாகக் காணலாம். காயத்ரீ மந்திரம் வேதங்களின் சாரமானதால் அதை ஆவாஹனம் செய்வதற்கு வேதமே ஒரு மந்திரத்தைக் கூறுகின்றது. காயத்ரீ ஆவாஹன மந்திரத்தில் ரிஷி, சந்தஸ், தேவதை இவைகள் கூறப்படுகின்றன.

"ஆயாது வரதாதேவீ..............................
ஆவாஹயாமி"

எனும் மந்திரத்தைக் கூறிப் பிரார்த்தித்தல் வேண்டும் என்று வேதம் வற்புறுத்துகின்றது. வேதங்களில் கூறப்படும் மற்ற மந்திரங்கட்கு இது போன்று ஆவாஹன மந்திரம் கூறப்படவில்லை. எனவே மந்திரஙகளில் மிக மிகச் சிறந்த உயரிய மந்திரம் காயத்ரீ மந்திரம் என்பதற்கு இதைவிட வேறு சான்றுத் தேவையில்லை என்பது நன்கு தெளிவாகின்றது.

காயத்ரீ வேதங்களுக்குத் தாய் ஆனதால் "வேத மாதா" என்றும், கானம் செய்பவரைக் காப்பதால் "காயத்ரீ" என்றும் சிறப்புக் காரணப் பெயர்களாக அமைந்து திகழ்கின்றன.

விசுவாமித்திரர் காயத்ரீ மந்திர ஜெப சித்தியால் பெறுதற்கரிய பிராம்மண்யத்தையும், பிரமக்ஞானத்தையும் பெற்று பிரம்ம ரிஷியாக விளங்கினார். மேலும் இம்மந்திரத்தின் ரிஷியாகவே விளங்குகிறர். எத்தகு உயர் சிறப்பினை காயத்ரீ மந்திர ஜெபம் அளிக்க வல்லது என்பதற்கு இதுவே சிறந்த சான்ருகும்.

காயத்ரீ மந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரமும் அபார சக்தி வாய்ந்ததாகும். இம்மந்திரத்தி லுள்ள இருபத்து நான்கு அக்ஷரங்களைக் கொண்டு வால்மீகி மகரிஷி இருபத்து நான்கு ஆயிரம் சுலோகங்களால் ராமாயண காவியத்தைச் செய்தருளினார். தியாகப்பிரம்மம் இருபத்து நான்கு நூறு கீர்த்தனைகளை. இயற்றினார். மற்றும் ஜயதேவர் இருபத்து நான்கு அஷ்டபதிகளை அருளினார்.

சைவராயினும், வைஷ்ணவராயினும், சாக்தராயினும் மற்றும் வடநாட்டவராயினும், தென்னாட்டவராயினும் ஜெபிக்கும் காயத்ரீ மந்திரம் ஒன்றே. இது சமய சமத்துவத்தை வற்புறுத்தும் ஒருமைப்பாட்டினை விளக்கும் மிகச் சீரிய உயர்ந்த மந்திரமாகும் என்பதில் ஐயமே இல்லை.

இம்மந்திரம் இத்தகு உயர் சிறப்பினைப் பெற்றுள்ள காரணத்தினாற்றான் இம்மந்திர உபதேசத்திற்குச் சிறப்பாக பிரம்மோபதேசம் எனப்படுகின்றது. காயத்ரீ மந்திர உபதேச ( பிரம்மோபதேச) ஸ்தானத்தில உபநயனமும், அநுஷ்டானத்திற்குத் சந்தியாவந்தனமும், புரச்சரணத்திற்கு உபாகர்மமும் ஆக நன்கு அமைந்துள்ளன. இது இம்மந்திரத்தின ஒரு உயர் தனிச்சிறப்பாகும்.

சங்கரர், பிரம்மா, மநு, வியாசர், வசிஷ்டர்,. விசுவாமித்திரர், யக்ஞவல்கியர், மார்க்கண்டேயர் ஆகிய மகிரிஷிகள் காயத்ரீ மந்திரத்தின் பெருமையை மிகவும் பாராட்டியுள்ளார்கள்.

ஆவணி அவிட்டத்தின் அதாவது யஜுர்உபாகர்மாவின் மறுநாள் காயத்ரீ மந்திர ஜெப தினமாக விதிக்கப்பட்டுள்ளது. ஆண்டிற்கு ஒருமுறையாவது சகல பாப நிவர்த்திக்காகவும், ஆன்மீக ஒளியைப் பெற்று பிரம்மக்ஞானத்தை அடைவதற்காகவும் 1008 முறை காயத்ரீ மந்திர ஜெபம் செய்து வருவது சாலசசிறநததாகும்.

மானிடரின் மனவெளி போர்க்களம் போன்றதாகும். அஞ்ஞானமாகிய அரக்கர்படை அதில் குவிந்துள்ளது. இப்போரில் வெற்றி காண, பிரம்மாஸ்திரம் காயத்ரீ மந்திரமாகும்.

எனவே வேதங்களின் சாரமாகவும், ஆத்ம சொரூபத்தை ஓங்குவிக்கும் மேலான ஒளியாகவும், ஞானமும், நிஷ்டையும், முக்தியும் அளிக்கவல்ல மகா மந்திரமாகவும் விளங்கித்திகழும் வேதமாதாவாகிய காயத்ரீ மந்திரத்தை பக்தி சிரத்தையுடன் நாளதோறும் ஜெபம் செய்து, நாம் பெறுதற்கரிய பேறு பெறுவோமாக.

"காயத்ரீம் சந்தஸாம் மாதா
இதம் ப்ரஹ்ம ஜுஷஸ்வ ந:"

ஜெய காயத்ரீ! ஜெய வேத மாதா!



## அருகம்புல்லும் இராமலிங்க அடிகளாரும்!

"பகுதி தகுதி விகுதியெனும் பாட்டின்
இகலிடையை இரட்டித்(து)த் தகவின்
அருச்சித்தால் முன்னால்? அது கடையாம் கண்டீர்
திருச் சிற்சபையானைச் சேர்ந்து.

இது வடலூர் வள்ளலார ஜோதி இராமலிங்க அடிகளார பாடல். ஏதாவது புரிகிறதா? "அறுகு என்று அழைக்கப்படுகின்ற அருகம் புல்லைக் கொண்டு தினந்தோறும் சிவபெருமானை அருச்சித்தால் இந்தப் பிறவியில் பதவியும் அடுத்த பிறவியில முக்தியும் கிடைக்கும்". இதுதான் பொருள்.

'பகுதி, தகுதி, விகுதி' என்ற மூன்று சொற்களின் இடை எழுத்தை இரட்டித்தால் என்று அவர் குறிப்பிடுகிறார். இம்மூன்று' சொல்லிலும் இடை எழுத்து எது? 'கு' என்பது. எவ்வளவு 'கு' இருக்கிறது? மூன்று. மூன்று 'கு' இரட்டித்தால் என்னவாகும்? அறு'கு' ஆகும் அல்லவா? அறுகு கொண்டு அர்ச்சித்தல என்பது பொருள்.

அருச்சித்தால் 'முன்னம்' என்கிறார். பகுதி தகுதி விகுதி என்ற மூன்று சொல்லிலும் முன்னால் இருக்கும் எழுத்துக்கள் எவை? 'ப' 'த' 'வி' என்பன. மூன்று எழுத்தையும் சேர்த்தால்... பதவி அதனால் கிடைக்கும்.

மேலும் 'அது கடையாம்' என்கிறார். பகுதி, தகுதி, விகுதி என்ற மூன்று சொல்லிலும் கடைசியில் இருக்கும் எழுத்து எது? 'தி' என்பது. எவ்வளவு 'தி' மூன்று தி. அவற்றைச் சேர்த்தால் முத்தி கிடைக்கும என்பது கருத்து.

இது பலாப்பழப்பாட்டுத்தான். முள் நீக்கி, கோது களைந்து, கொட்டை எடுத்தால் இனிய பலாச்சுளை கிடைக்கும். சிரமப்பட்டாலும் பாடல பொருள தெரியும் போது அப்படி ஒரு இன்பம் கிடைக்கத்தான செய்கிறது.

'வைரக்கல்' என்ற நூலிலிருந்து
தொகுத்தவர்: திருமதி. கமலா மாரியப்பன்

## தி.தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீபாலாஜி ஆரோக்ய வரபிரஸாதினி திட்டம்

பன்னெடுங்காலமாக, ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி நின்றவண்ணம் அருள் புரிந்திடும் திருமலையானது புகழ்பெற்ற ஒரு புனிதத்தலமாக விளங்கி வருகிறது. தங்களுடைய மனக்குறைகள் மறையவும், பிரச்சனைகள் தீரவும் நாள்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு வந்த வண்ணம் இருக்கின்றனர்.

வாழ்க்கையில் இயற்கையின் கொடுமையால் பல வகைகளில் துயருறும் மனிதர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானம் பல திட்டங்களை மேற்கொண்டு வருகின்றது. இந்த வகையில் மருத்துவமனைகள், தொழுநோய் விடுதிகள், உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு இல்லம், பார்வையற்றோர் இல்லம் என்று பல நற்பணி அமைப்புக்களை நடத்தி வருகின்றது. மேலும் பொது மக்களுக்கு நவீன மருத்துவ வசதிகள் அமைத்துத் தரும் வகையில், புதுவை - ஜிப்மர், புதுடில்லி அகில இந்திய மருத்துவக்கழகம், சண்டிகார் - முதுகலை மருத்துவமையம் ஆகியவற்றிற்கு நிகராக தி. தி. தேவஸ்தான வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் வகையில் மேலாண்மை ஏழும்லையான் திருவருளால் ஸ்ரீவேங்கடேஸ்வரா மருத்துவ ஆராய்ச்சி நிலையம் ஒன்றினை அண்மையில் திருப்பதியில் நிறுவி உள்ளது. அதிநவீன மருத்துவ சாதனங்களுடன் கூடிய இந்நிறுவனம் ஏழை மக்களுக்குப் பெரிதும் பயன்பட வேண்டுமென்பதே மேலாண்மையின் பெரு விருப்பமாகும். இந்த விருப்பம் பெருமளவில் வெற்றியடைய வேண்டுமென்றால் இரக்கமுள்ள மக்களின் முழு ஒத்துழைப்பும் தேவை. இதனை மனதிற்கொண்டு "ஸ்ரீபாலாஜி ஆரோக்யவரபிரஸாதினி" எனும் புதிய திட்டத்தை தி.தி. தேவஸ்தான மேலாண்மை புகுத்தியுள்ளது.

### திட்டச் சுருக்கம்

இத்திட்டத்திற்கெனப் பொதுமக்கள் ரூ. 1000/- அல்லது அதைப்போல பன்மடங்கு, / ரூ. 1 இலட்சம்,/ 5 இலட்சம்,/ 10 இலட்சம் என தி.தி. தேவஸ்தானத்திற்கு நன்கொடை அளித்தால், அந்தத் தொகைக்கு ஈடாகத் தன்பங்காக தேவஸ்தான மேலாண்மையும் நிதி ஒதுக்கி, மொத்த தொகையானது தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் முதலீடு செய்யப்படும். அத்தொகைக்கு வரும் வட்டித்தொகை மேற்படித் திட்டத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

ரூ. 10 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயரைக் கொண்டு இவ் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆராய்ச்சி பதவி ஒன்று அமைக்கப்படும்.

தனிநபர், குடும்பம், நிறுவனம், கழகம் பெயர்களில் நன்கொடை அளிக்கலாம்.

ரூ. 5 இலட்சம் மற்றும் அதற்கு மேற்பட்டு நன்கொடை அளிக்கும் நபர்களின் பெயர்கள் மருத்துவமனை வரவேற்பு அரங்கில் காட்சியாக்கப்படும்.

பயன்பெறும் நோயாளிகளின் அடையாள அட்டையில் நன்கொடையாளரின் பெயர் அச்சடிக்கப்படும்.

### மற்றைய பயன்களும், வசதிகளும்

இத்திட்டத்திற்கென வழங்கப்படும் நன்கொடைக்கு வருமானவரிச் சட்டப் பிரிவு 80 (G) கீழ் வருமானவரி விலக்கு அளிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களுக்கு கட்டண அறைகள் / குளிர்ச்சாதன அறைகள் மருத்துவமனையில் ஒதுக்கப்படும்.

ரூ. 5 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டு அளிக்கப்படும் நன்கொடையாளர்களின் பெயர்கள் கட்டண அறைகளுக்கு வைக்கப்படும்.

ரூ. 5 இலட்சம் நன்கொடை அளிக்கும் நபர்களின் பரிந்துரை பேரில் ஆண்டு ஒன்றுக்கு அறுவை சிகிச்சை வசதி ஒன்று அளிக்கப்படும்.

இத்திட்டத்திற்காக அளிக்கப்படும் நன்கொடை தொகையானது "Executive Officer, T.T.D. Tirupati" எனும் பெயரில் வங்கி காசோலை மூலம் செலுத்தப்பட்டு, அதனை "Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati" எனும் முகவரிக்குக் கீழ்க்காணும் தகவல்களுடன் அனுப்புதல் வேண்டும்.

ரூ.1 இலட்சம் அல்லது அதற்கு மேற்பட்டுத் தொகை வழங்கும் நன்கொடையாளர்களின் குடும்ப நபர்களின் (மார்பளவு) புகைப்படங்களும் மற்றும் முழுமுகவரியும் அனுப்புதல் வேண்டும்.

வருமானவரி விலக்குச்சான்றிதழ் அளிக்கப்பட வேண்டியவரின் பெயர், முகவரி தகவல்களை அனுப்புதல் வேண்டும்.

**The Executive Officer, T.T. Devasthanams, Tirupati.**

அல்லது

**The Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati.**

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

(உமைப்ரியன்)

## ஐந்தாம் அத்தியாயம்

## ஸந்யாஸ யோகம்

ஞானேன து தத்க்ஞானம் யேஷாம்
நாசிதமாத்மன: ।
தேஷாமாதித்யவஜ்ஞானம்
ப்ரகாசயதி தத்பரம் ।। (16)

"யாருடைய அறியாமை ஆத்ம ஞானத்தால் (ஆன்மப்பேரறிவால்) அழிக்கப்படுகிறதோ, அவர்களுக்கு அந்த ஞானமானது (பேரறிவானது) சூரியனைப் போன்று விளங்கி (அந்த) பரம்பொருளை விளக்குகிறது."

(இங்கு பேரறிவானது சூரியனுடன் ஒப்பிடப்படுகிறது. சூரியன் வானத்தில் தோன்றியவுடன், இருள் தானாக மறைந்துவிடுகிறது. அதே போன்று ஞானமாகிய பேரறிவானது ஒருவனுக்குத் தோன்றிடும்போது அறியாமை அவனிடமிருந்து மறைந்துவிடுகிறது. சூரிய ஒளியானது, உலகத்தில் உள்ளதை உள்ளவாறு காட்டுவது போன்று, பேரறிவானது அந்தப் பரம் பொருளை நமக்கு விளக்குகிறது.)

தத்புத்தயஸ்ததாத்மானஸ்-
தந்நிஷ்டாஸ்தத்பாராயணா: ।
கச்சந்த்யபுனராவ்ருத்திம்
ஞானநிர்தூதகல்மஷா: ।। (17)

"பிரம்மத்தின்பால் (தன்) அறிவை செலுத்துபவர, அதனையே தானாகக் கொள்பவர், அதிலேயே உறுதியாக விளங்குபவர், தனையே புகலிடமாக்கிக் கொள்பவர் பேரறிவால் பாவங்களைப் போக்கிக் கொள்பவர் (ஆகியோர்) பிறந்து பிறவி எடுப்பதில்லை."

(பேரறிவான ஞானத்தைப் பெற்றவன் எல்லாம் பெற்றவனாகக் கருதப்படுகிறான். அதனால் அவன் தெய்வீக நிலையை அடைகின்றான். எங்கும் எதிலும் இறைவனையே காணகின்றான். அதனால் அவன் பிரம்மத்தின் மறு உருவமாகத் திகழ்கின்றான். அப்போது பிறவி எனும் பிணைப்பு அவனுக்குப் பிறகு எப்போதும் ஏற்படுவதில்லை. சூரியன் எவ்வளவு முயற்சி செய்தாலும் அவனால் இருட்டு என்பதை எவ்வாறு காணமுடியாதோ, பேரறிவு பெற்ற ஞானியால் எங்கும் பிரம்ம ஒளியினையே காண்பானாகின்றான்.)

வித்யாவினயஸம்பன்னே
ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ।
சுனி சைவ ச்வபாகே ச
பண்டிதா: ஸமதர்சின: ।। (18)

"கல்வியடக்கம் கொண்ட அந்தணனிடமும், பசுவினிடமும், யானையிடமும், நாயினிடமும், நாயைத்தின்னும் கீழ் மக்களிடமும் ஞானிகள் சமநோக்கமே கொள்வார்கள்."

(நன்குக் கற்றுத் தேர்வது மட்டுமின்றி, அக்கல்வியினால் கர்வம் கொள்ளாது, அடக்கத்துடன் விளங்குபவனே உண்மை அந்தணன். அத்தகு அவன் மக்களில் பெருமையுடையவனாவான். விலங்குகளில் புனிதமாகக் கருதப்படுவது பசு. வயது வித்யாசமின்றி எவரையும் என்றும் கவருவது, ஒரு மனஈடுபாட்டை தோற்றுவிக்கும் உருவம்கொண்டது யானையாகும். மக்களிடையே வாழ்ந்தாலும் அவர்களால் பெரிதும் ஒதுக்கப்பட்டு வாழ்வது நாய். கீழான பிறவியாகக் கருதப்படுபவன் அந்த நாயினைத் தின்பவன். இவ்வாறு பொதுவாக மக்களிடையே வேற்றுமை பாராட்டப்படுபவை மேற்கூறிய



னவாகும். ஆனால பேரறிவு கொண்ட ஞானியானவன இவ்வாறு அவற்றிடையே வேற றுமை பாராட்டமாட்டான். எல்லாவற்றிலும் அந்தப் பரமபொருளையே காண்பான். இங்கு ஞானியானவன், காவேரி, சாக்கடை என்று வேற்றுமை பார்க்காது தன் ஒளியைப் பாய்ச்சிடும் சூரியனுக்கு நிகராகக் கருதப்படுகிறான்.)

இஹைவ தைர்ஜித: ஸர்கோ
யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: ।
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்-
மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ।।(19)

"மனதை சமமாக வைத்துக கொள்பவர்கள் இந்தப் பிறவியிலேயே இயற்கையை அடக்கி ஆள்பவர்களாவார்கள். பிரம்மம் சமநோககம கொண்டது. குறையில்லாதது. ஆகையால் அவர்கள் (பிரம்ம ஞானிகள்) பிரம்மத்தில் (மெய்ப்பொருளில்) நிலைத்து இருப்பார்கள்."

(உடைந்த கண்ணுடியில் காணப்படும் பொருள் தெளிவாகத் தெரியாது. கண்ணுடி தூய்மையாக, உடையாததாக இருந்தால்தான் காணப்படும் பொருளை உள்ளது உள்ளவாறு நாம் காணமுடியும். இந்தக் கண்ணுடி போன்றது தான் மனம் என்பது. அம்மனத்தின் உறுதியால் பிரம்ம ஞானம் உதயமாகிறது. அந்தப் பிரம்மம் அசையாத ஒன்ருக விளங்கும் போது வேற்றுமைகள், மாறுபாடுகள் அதன் கண் நிகழா. அதனால் குறையில்லாத, கேடில்லாத ஒன்ருக அப்பிரம்மம் விளங்குகிறது. அந்த பிரம்மத்தைக் கொண்டவனே பிரம்மஞானியாவான்.)

ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய
நோத்விஜேத்ப்ராப்ய சாப்ரியம்
ஸ்திரபுத்திரஸம்மூடோ
ப்ரஹ்மவித்ப்ரஹ்மணி ஸ்தித: ।।(20)

"மெய்ப்பொருளை (பேரறிவை) அறிந்தவன், அம்மெய்ப்பொருளில் நிலைபெற்றவன், உறுதியான அறிவைக் கொண்டவன், மனத்தில் குழப்பம் இல்லாதவன் (ஆகியோர்) விரும்பியதைப் பெற்றதால் மகிழ்ச்சியோ, விரும்பியதைப் பெருததால் துன்பமோ கொள்வதில்லை."

(நான செய்கிறேன், என்னுடையது என்ற உணர்வினால் இயங்குபவன் மனக்குழப்பத்திற்கு ஆளாகின்ருன். அதனால் பெறப்படும் இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு ஆகிய உணர்வுகளை அவன் தன் உடம்பால் அனுபவிக்கின்ருன். ஆனால் எல்லாம் அப்பரம்பொருள் என்ற மெய்யறிவை உடையவன் இது போன்ற உணர்வுகளுக்கு அடிமையாவதில்லை.)

பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா
விந்தத்யாத்மனி யத்ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா
ஸுகமக்ஷயமச்னுதே ।। (21)

"உலக விஷயங்களில் மனத்தை அடிமையாக்காதவன் ஆத்மாவில் இன்பம் பெறுகின்ருன். பிரம்ம சமாதியில் (மெய்ப்பொருள் தியானத்தில்) மனத்தை உடைய மனிதனானவன் குறையாத இன்பத்தைப் பெறுகின்ருன்."

(ஐம்பொறிகளின் மூலமாகப் பெறப்படும் வெளியுலக இன்பங்களை நிலையற்றவையாகும். இவற்றை சிற்றின்பம் என்று அழைப்பர். ஆனால், உடலுக்குள் இருககும் ஆத்மா தூய்மையாக விளங்கிடும் போது, இறையனுபவத்தை நுகர்கின்றது. இதுவே நிலையான பேரின்பம் என்று கூறப்படுகிறது.)

யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:
கயோனய ஏவ தே ।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந
தேஷு ரமதே புத: ।। (22)

"புலன்களின் மூலமாகப் பெறப்படும் இன்ப அனுபவங்களே துன்பத்திற்குக் காரணங்களாகும். குந்தியின் மகனே! முதலும் முடிவும் உடைய அந்த புலனின்பங்களை ஞானியானவன் நாடுவதில்லை."

(புலனின்பங்களுக்கு மனிதன் தன்னை அடிமையாக்கிக்கொள்வதன்மூலம் தானே தன் துன்பத்திற்குக் காரணனாகின்ருன். புலன்களைக் கொண்டு இன்பங்களை நுகரும் போது, சுகம் எனும் மயக்கத்திற்கு ஆளாகின்ருன். உடல் சுகமே இறுதி சுகம் என்று நினைத்துககொள்கிருன். இன்ப விஷயங்களை விட்டு புலன்கள் நகரும்போது துன்பத்தையும், ஏமாற்றங்களையும் எதிர்கொள்ளுகின்ருன். ஒரு சிறிது இன்ப அனுபவத்திற்காக இறுதியில் பெரிய துன்பங்களுக்கு ஆளாக்கிக் கொள்கின்ருன். இந்த மனத்தை, புலன்களை கட்டுப்பாடு செய்யும் போது மனிதன் மிருகத்தினிடமிருந்து தன்னை வேறுபடுத்திக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது.)

சக்னோதீஹைவ ய: ஸோடும்
ப்ராக்சரீரவிமோக்ஷணுத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ
யுக்த: ஸ ஸுகீ நர: ।। (23)

"இப்பிறவியில் (மனிதப்பிறவியில்) உடலைவிட்டு செல்வதற்கு முன், காமம் மற்றும் கோபம் எனும் குரோதம் ஆகியவற்றின் கடுமையைப் பொறுத்துக்கொள்பவரே (அடக்குபவனே) யோகியாகக் கருதப் படுவான். அவன்தான உண்

மையான இன்பத்தை அனுபவிப்பவனாவான்."

(காமமும், கோபமும் மனிதனை மிருகமாக்கும் பண்புகளாகும். உடம்பில் ஆசையிருக்கும் அளவு, புலன்களின் வழியாகத்தான் ஒருவனது உடலும், உயிரும் இயங்கும். மேற்கூறிய பண்புகளால் மனிதன் தாக்கப்படும் போது, அவன் விருப்பு, வெறுப்பு, தளர்ச்சி என்று உள்ளத்தாலும், உடலாலும் அலைக்கழிக்கப்படுகின்றான். ஆகவே எல்லா துன்பங்களுக்கும் வழி வகுக்கும் காமத்தையும் கோபத்தையும் அடக்குபவனே மனிதர்களுள் சிறந்த யோகியாகத் திகழ்வான். அவன் ஆத்மாநுபவத்திலேயே இன்பத்தை நாளும் நுகர்பவனாவான்.)

யோऽந்த: ஸுகோऽந்தராராமஸ்-
ததாந்தர்ஜ்யோதிரேவ ய: ।
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம்
ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ।। (24)

"ஆத்மாவில் இன்பத்தை அனுபவித்து, ஆத்மாவில் விளையாடி, ஆத்மாவில் உள்ளொளி காணும் ஒரு யோகியானவன் தானே மெய்ப்பொருளாகி, பிரம்ம நிர்வாணத்தை (முக்தியை - வீடுபேற்றை) அடையப்பெறுகின்றான்."

(இச்செய்யுளில் மனிதன் புறப்பொருள்களின் மேல், அதனால் பெறப்படும் இன்பங்களின்மேல் இருக்கும் மோகத்தைத் துறக்கும் அளவு, உறவுகளை விடும் அளவு அவன் ஞானநிலையை நோக்கி விரைவாக அடியெடுத்து வைக்கின்றான் என்று கூறப்படுகிறது. அதாவது யோகி, வெளியில் காணப்படும் இன்பத்தை தன் ஆத்மாவிலேயே காணத்துவங்குகிறான். அப்போது அவனே மெய்ப்பொருள் ஆகி, இறுதியான முக்தியைப்பெற தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்கிறான்.)

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய:
க்ஷீணகல்மஷா: ।
சின்னத்வைதா யதாத்மான:
ஸர்வபூதஹிதே ரதா: ।। (25)

"பாவங்களைப் போக்கி, சந்தேகங்களை அகற்றி, ஐம்பொறிகளை அடக்கி, மற்றைய உயிர்களின் நன்மையில் இன்பத்தைக் காணும் மாமுனிவர்கள் பிரம்ம நிர்வாணம் (முக்தி) பெறுகிறார்கள்."

(இங்கு யோகிகளின் நிலை கூறப்படுகிறது. யோகிகள் எனும் முனிவர்கள், ஞானிகள் தங்கள் ஆத்மாவிலேயே அந்த மெய்ப்பொருளை கண்டு அனுபவித்தவர்கள். பற்றுகளைத் துறந்ததனால் இந்த நிலையினை இந்த மனமுதிர்ச்சியினை அவர்கள் எளிதில் கைக்கொள்கிறார்கள். தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனும் வகையில் மற்றைய உயிர்களும் உயர்கதிபெற, பல்வேறு வழிமுறைகளையெல்லாம் கூறிப்போகிறார்கள். இதனால் அவர்களது அறிவும், உணர்வுகளும் மேலும் பிரகாசித்திடும்போது முக்தி என்பது எளிதான ஓர் இலக்காக - இலட்சியமாக அவர்களுக்கு அமைந்துவிடுகிறது.)

காமக்ரோதவியுக்தானாம் யதீனாம்
யதசேதஸாம் ।
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம்
வர்த்ததே விதிதாத்மனாம் ।। (26)

"ஆசை எனும் காமம், குரோதம் எனும் கோபம் ஆகிய இவற்றிலிருந்து விலகி, மனதினை அடக்கி, ஆத்மாவை அறியும் மெய்யறிவைப் பெற்று விளங்கிடும் துறவிகளுக்கு (ஞானிகளுக்கு) இப்பிறவியிலும், மறுபிறவியிலும் முக்தி என்பது எளிதாகின்றது."

ஸ்பர்சான் க்ருத்வா பஹிர்
பாஹ்யாம்ஸ்
சக்ஷுஸ்சைவாந்தரே ப்ருவோ: ।
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா
நாஸாப்யந்தரசாரிணௌ ।। (27)

யதேந்த்ரியமனோபுத்திர்முனிர்
மோக்ஷபராயண: ।
விகதேச்சாபயக்ரோதோ ய:
ஸதா முக்த ஏவ ஸ: ।। (28)

"வெளியுலக நிகழ்ச்சிகளை வெளியில் தடுத்து நிறுத்தி,(சிந்தனையிலிருந்து அகற்றி) இரு கண்களின் பார்வையினையும் இரு புருவங்களின் இடையில் நிலைநிறுத்தி, மூக்கின்வழியாக வந்து போகும் பிராணன், அபானன் எனும் இருவழி மூச்சுக்காற்றுப்போக்கினை சமம் செய்து, புலன்கள், மனம், அறிவு ஆகியவற்றை அடக்கி, முக்தியை நாடி, ஆசை, அச்சம், கோபம் ஒழித்து குணசீலனாய் இருப்பவன் எப்போதும் முக்தனென்றே அழைக்கப்படுவான்."

(வெளியில் ஐம்புலன்களினால் பெறப்படும் நிகழ்ச்சிகளில் (ஒலி, மணம், காட்சி போன்றன) சிந்தனை செலுத்தாது, அவை வெளியிலேயே தடுத்து நிறுத்தப்பட வேண்டும். மனமமைதிபெற வேண்டுமென்றால், முன்பே கூறியபடி, நாம் சுவாசிக்கும் காற்றுப்போக்கினை சமமாக வைத்திடல் வேண்டும். கோபம், காமம் ஆகிய உணர்ச்சிகளுக்கு உடலும், உள்ளமும் துணைபோகும் போது, மூச்சுக்காற்றின் போக்கும் அதிகமாகிறது. அதுபோது சிந்தனையும் மனமும் கட்டுக்குள் இருப்பதில்லை. ஆகவே மனம் அமைதி

பெற மூச்சுக்காற்று ஒழுங்குப படுத்தப்படவேண்டும. அசையும் நீரில் உருவம் தெளிவாகத் தெரியாது. அதுபோன்று அலையும் மனதில் அமைதி தோன்ருது. தியானமே அதற்குச் சிறந்த பயிற்சியாகும். அவனது மனம் எண்ணெய் ஒழுக்கு போன்று, இடைவிடாத தடங்கலற்ற முறையில் கடவுளைப் பற்றி மனம் எண்ணுதல வேண்டும். அவ்வாறு மனம, அறிவு ஆகியவற்றை நெறிப்படுத்துவனே முக்தனாவான்.

போக்தாரம் யக்ஞதபஸாம்
ஸர்வலோகமஹேச்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம்
ஞாத்வா மாம் சாந்திம் ருச்சதி ।।(29)

"வேளவி, தவம் ஆகியவற்றை அனுபவிக்கின்றவனும, உலக முழுமைக்கும தலைவனும், உயிர்களுக்கெல்லாம் நண்பனாக இருப்பவனும் நான (இறைவன்) என்பதை அறிபவன் அமைதி பெறுகின்ருன்."

(வேள்வி, தவம் ஆகியவற்றை செய்விக்கும் கருவியாக இருந்து அவற்ருல் அடையப் பெறும் தேவதையாக இருப்பவன் அந்த பரம்பொருளதான். அவ் இறைவன் எந்தவித எதிர்பாரப்பும் இன்றி, எல்லா உயிர் இடத்தும் கருணையே காட்டுகின்ருன். எலலோர் உள்ளத்தும் சாட்சியாக இருந்து அவரவர்களுடைய நல்வினை, தீவினைகளுக்கேறப பலாபலன்களை அருளுகின்ருன். இந்த உண்மையை தெரிநது கொண்டவர்கள் மனதில் குழப்பம், மயக்கம் கொள்ளமாட்டார்கள். அமைதியே பெறுவாரகள.)

(ஐந்தாம அத்தியாயம் முற்றும)

(தொடரும்)

## பிரம்மம்

'அக உணர்வாக உள்ள பிரம்மமே பூமி, காற்று, நீர், நெருப்பு, ஆகாயம் என்ற ஐம்பூதங்களாகவும் இலங்குகிறது.

--ஐத்ரேய உபநிடதம்

அண்ட சராசரங்களையும் ஆட்டி நிற்கும் ஆற்றல் ஒன்று இருக்கிறது என்ற உண்மையினை உணர்கிருேமே அந்த உண்மைதான் இறைமை அல்லது பிரமம் என்று கண்டோம்.

இயற்கையினை நுகரும் நம் இதயம் இந்த உண்மையினை உணர்கிறது. நம் ஐயுணர்வுகளால் இந்த மெய்யுணர்வினை நாம் பெறுகிருேம்.

ஊறு, சுவை, ஒளி, மணம், ஓசை என்ற ஐந்து உணர்வுகளின் அடிப்படையில் இயற்கைப் பொருள்களை ஐந்து வகையாகப் பிரித்துள்ளனர் நம் முன்னோர்கள்.

நிலம் : என்பது மண் மண்ணிற்கு மணம், சுவை, ஒளி, ஊறு (உடலால் உணர்தல்) ஓசை என்ற ஐந்து குணங்களும் உண்டு.

நீர் : இதற்கு மணம் இல்லை. சுவை, ஒளி, ஊறு, ஓசை என்ற நான்கு பண்புகளும் உண்டு.

நெருப்பு : மணம், சுவை இரண்டும் இல்லை. ஒளி, ஊறு, ஓசை என்ற மூன்று குணங்களும் உண்டு.

காற்று : மணம், சுவை, ஒளி இல்லை. ஊறு, ஓசை இரு பண்புகள் மட்டும் உண்டு.

ஆகாயம் : மணம், சுவை, ஒளி, ஊறு இவை நான்கும் இல்லை. ஓசை என்ற ஒரே பண்புதான் உண்டு.

உலகப்பொருள்கள் அனைத்தும் இவ்வைமபூதங்களால் ஆனவை. இவற்றை இப்பூதங்கள் ஐந்திலும் நிலவுவது இறைமைதான் என்பதை உணர்ந்து கண்டனர் ஞானிகள்.

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்ருய் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்ருய் விளைந்தாய் போற்றி

--போற்றித் திருவகவல்

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்



(தொடர் கட்டுரை)

## நாராயண பதப்பொருள்

**மூலம் : 95**

"நாராயணன் என்றது நாரங்களுக்கு அயநம் என்றபடி."

(இதுவரை 'ஓம்' 'நம:' என்னும் பதங்களை விளக்கியருளினார் ஆசிரியர்! இனி, 'நாராயண' என்பதன் பொருளை விளக்குகிறார்.)

1) 'நாராயண' என்பதன் பொருள் யாது?

நாராயண என்னும் திருநாமம் வடமொழிச் சொல். இச்சொல்லுக்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர்.

i) நாராணும்+அயநம் ய:ஸ:" என்று பிரித்தால், நாரங்களுக்கு ஆதாரமாய் இருப்பவன் எவனோ அவனே நாராயணன் என்னும் பொருள் கிடைக்கும். இது தத்புருஷமாஸ்மாம்.

ii) "நாரா: அயநம் யஸ்ய, ஸ:" என்று பிரித்தால், எவன் நாரம் ஒவ்வொன்றிலும் பூரணமாய் இருக்கின்றானோ அவனே நாராயணன் என்று பொருள் கிடைக்கும். இது பஹீவ்ரீஹி ஸமாஸம் எனப்படும்.



# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

**மூலம் : 96**

"நாராங்களாவன, நித்ய வஸ்துக்களினுடைய திரள்"

1) நாரங்கள் என்றால் என்ன?

நித்ய வஸ்துக்களினுடைய திரள்களே நாரங்கள் எனப்படும். வடமொழியில் 'ர' என்னும் சொல்லுக்கு அழிவுள்ளது என்பது பொருள். 'ந' என்பதற்கு இல்லை என்பது பொருளாகிறது.

'நர' என்னும் சொல் 'நார' என்றாகும் போது அழிவில்லாத பொருள்களின் திரள் என்றாகிறது.

எனவே, 'நாரா:' என்னும் சொல் நித்திய வஸ்துக்களின் திரள் எனப்பொருள் தரும். என்பது தெளிவாகிறது.

**மூலம் : 97**

"அவையாவன: (1) ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகளும், (2)

ஜ்ஞாத சக்த்யாதிகளும், (3) வாத்ஸல்ய ஸௌசீல்யா திகளும், (4) திருமேனியும், (5) காந்தி ஸௌகுமார்யாதிக ளும், (6) திவ்ய பூஷணங்க ளும், (7) திவ்யாயுதங்களும் (8) பெரிய பிராட்டியார் தொடக்க மான நாய்ச்சிமார்களும் (9) நித் யஸூரிகளும், (10) சத்ர சாமரா திகளும், (11) திருவாசற் காக்கும் முதலிகளும் (12) கணதிபரும், (13) முக்தரும், (14) பரமாகாச மும், (15) ப்ரக்ருதியும், (16) பத்தாத்மாக்களும், (17) கால மும், (18) மஹதாதி விகாரங்க ளும், (19) அண்டங்களும், 20) அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்.''

1) இம்மூலத்தில் ஆசிரியர் எவற்றை விரிவாகக் குறிப்பிடுகிறார்?

நித்திய வஸ்துக்களின் திரள் களை இம்மூலத்தில் ஆசிரியர் விரிவாக விளக்கிக் கூறுகிறார்.

2) நித்திய வஸ்துக்களின் திரள்கள் என்பவை யாவை?

பரமாத்மா நீங்கலாக உள்ள மற்றைய பொருள்கள் அனைத் தையும் 'நார' என்னும் பதம் குறிக்கிறது. எனவே, சித்து, அசித்து, பரமாத்மாவின் கல் யாண குணங்கள் முதலான அனைத்துப்பொருள்களுமே நித் திய வஸ்துக்களின் திரள்கள் எனப்படும்.

3) ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகள் - விளக்குக.

ஞானத்துவம், ஆனந்தத்து வம், அமலத்துவம், சத்தியத்து வம், அநந்தத்துவம் ஆகியவை பரமாத்மாவுக்குச் சொரூபக நிரூ பக தருமங்கள் ஆகியவை பர மாத்துமாவுக்குச் சொரூபக நிரூபக தருமங்கள் (எடுத்துக் காட்டப்படும் குணங்கள்) எனப் படும்.

4) ஞானத்துவம் - விளக்குக

ஞானத்துவம் என்பதற்கு அறிவின் தன்மை என்பது பொருளாகும். உள்ளும் புற மும் உப்பாகவே இருக்கும் உப்புக்கட்டி! அதைப்போலவே, பரமாத்வாவும் முற்றும் ஞான மாகவே இருக்கிறார். ஞானத் தின் தன்மையே இறைவனின் இயல்பாகும். வாலறிவன் என் பார் வள்ளுவரும்!

5) ஆனந்தத்துவம் - விளக்குக

ஆனந்தப்படும் பொருளின் தன்மை என்பது இதன் பொரு ளாம். தேன், பால், கரும்பு முதலியன உண்ணுங் கால் நமக்கு இன்பத்தை அளிக் கிறது. எனவே அவற்றை நாம் விரும்புகிறோம். அவை ஏன் நம்மால் விரும்பப்படுகின் றன என்று கேட்டால், அதற்கு நம்மால் என்ன பதில் கூறமுடி யும்?

அதுபோலவே, பிரமம் நம் மால் விரும்பப்படும் பொருளாக உள்ளது. இந்தத் தன்மையே ஆனந்தத்துவம் எனப்படும்.

6) அமலத்துவம் விளக்குக.

தானும் குற்றமற்ற பொருளாக இருந்து, மற்றையப் பொருள்க ளின் குற்றங்களையும் போக் குவது எதுவோ அதுவே அம லத்துவம், நமலத்துவம் இவ் விரண்டும் ஒரே பொருளைத் தரும் சொற்களாம்.

7) ஸத்தியத்துவம் - விளக்குக.

அசித்துக்குள்ள பண்பின் வேறுபாடு, வடிவ வேறுபாடு களும் சித்துக்குள்ள பண் பின் விகாரங்களும் அற்றி ருப்பது எதுவோ அதுவே சத் தியப்பொருளாகும். அதன் தன் மையே சத்தியத்துவம்.

8) அநந்தத்துவம் - விளக்குக.

எல்லாத் தேசங்களிலும், எல் லாக் காலங்களிலும், எல்லாப் பொருள்களிலும் ஆன்மாவாக இருப்பது எதுவோ, அதுவே அநந்தப் பொருளாகிய தத்து வம் எனப்படும்.

(இதுவரை மலருக்குள்ள மணத்தைப் போன்று, பிரமத் துக்குரிய குணங்களைக் கூறி னார். அதாவது பகவானை எடுத்துக் கூறினார்.

இனி மலருக்குள்ள நிறம் முத லிய குணங்களைப் போன்று பிரமத்துக்குரியவனாக உள்ள குணங்களைக் கூறத்தொடங்குகி றார்.)

9) ஜ்ஞான சக்த்யாதிகள் - விளக்குக.

ஞானம், சத்தி, பலம், ஐஸ் வர்யம், வீரியம், தேஜஸ் எனப் படும் குணங்கள் ஆறும் நிரூ பித சொரூப விசேஷணங்களாம். அதாவது இறைவனின் திருமே னியை விளக்கும் குணங்களாம்.

10) ஞானம் - விளக்குக

எல்லா இடங்களிலும், எல் லாக் காலங்களிலும் உள்ள எல்லாப் பொருள்களின் பண்பு பண்பிகளையும் ஒன்றுவிடாமல் ஒரே இடத்தில் கண்கூடாகக் காணுதலே ஞானம் எனப்படும்.

11) சத்தி - விளக்குக

சத்தி என்பது பகவானுக்குப் பலவிதமாக உள்ளது. உலக உயிர்கள் யாவற்றையும் ஒரே

சமயத்தில் நடத்தும் சத்தியே பகவானுக்குள்ள சத்தியாம்.

12) பலம் - விளக்குக.

தன்னுடைய உறுதிப்பாட்டினால் - ஆற்றலால் எல்லாப் பொருள்களையும் தாங்கிக் கொள்ளும் வல்லமையே பலம் எனப்படும்.

13) ஐசுவரியம் - விளக்குக.

எல்லாப் பொருள்களையும் நியமித்து நடத்தும் திறமையே ஐசுவரியம் எனப்படும்.

14) வீரியம் - விளக்குக.

உலகப்பொருள்கள் யாவற்றையும் உண்டாக்கித் தான் யாதொரு விகாரமுமின்றி இருத்தல், அவற்றை நடத்திக் கொண்டு போகுங்கால் தளர்ச்சியின்றி இருத்தல் ஆகியவை வீரியம் எனப்படும்.

15) தேஜஸ் - விளக்குக.

சூரியன் முன் நட்சத்திரங்கள் முதலியன ஒளி வீசா. அதைப் போன்று பகவான் முன் மற்றைய பொருள்கள் ஒளிவீசா. மற்றவற்றின் ஒளியைத் தன் ஒளியால் மங்கச் செய்யும் தன்மையே தேஜஸ் எனப்படும்.

(இவை ஆறும் பகவானுக்குள்ள முக்கிய குணங்களாம்.)

16) வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகள் யாவை?

வாத்ஸல்யம், ஸௌசீல்யம், ஸ்வாமித்வம், ஸௌலப்பியம் முதலான எண்ணற்ற கல்யாண குணங்கள் பகவானுக்குள்ளன. இவை பக்தர்களையும், (ஞானிகள்) பிரபன்னர்களையும் காத்தலுக்குரிய குணங்களாம்.

குற்றத்தையும் குணமாகக் கொள்ளும் அளவற்ற அன்பே வாத்சல்யம் எனப்படும்.

(வாத்சல்யம் முதலானவை மேற்சொன்ன குணங்கள் ஆறினையும் சார்ந்தவையாம்.)

17) ஸௌசீல்யம் - விளக்குக.

உயர்ந்தவர் தாழ்ந்தவரோடு கலக்கும்போது, தன் உயர்வும் தன்னுடன் கலப்பவனுடைய தாழ்வும் நெஞ்சில் சிறிதும் தோன்றாது குற்றமின்றிக் கலக்கும் பண்பே ஸௌசீல்யம் எனப்படும்.

18) ஸ்வாமித்வம் - விளக்குக.

தன்னையொழிந்த மற்றைய அனைத்துப் பொருள்களுக்கும் தலைவனாயிருக்கும் பண்பே ஸ்வாமித்வம் எனப்படும்.

19) ஸௌலப்பியம் விளக்குக.

யாவரும் தன்னை வந்து பற்றுதற்கு எளியவனாய் இருக்கும் தன்மையே ஸௌலப்பியம் எனப்படும்.

20) 'திருமேனி' - விளக்குக.

திருமேனி என்பது பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்தைக் குறிக்கும். நமக்குள்ள ஐம்பூதங்களாலான சரீரம் போன்று ஆண்டவனின் சரீரம் இல்லை. ஆனால், பகவானின் பெருமைக்கு ஏற்ற வண்ணம் மேலான சரீரம் ஒன்று உண்டு. அதுவே திருமேனி எனப்படும்.

21) "காந்தி ஸௌகுமார்யாதிகள்" விளக்குக.

அழகு, மென்மை, மணம், இளமை, பருவம் முதலியன விக்கிரகத்துக்குள்ள குணங்களாகும்.

22) அழகு - விளக்குக.

அழகு இருவகைப்படும். (1) அவயவத் திரளின் அழகு (2) தனித்தனி அவயவத்தின் அழகு.

அவயவத்தின் திரள் அழகாக இருந்தால், தனித்தனி உறுப்புகள் அழகாயிருத்தல் என்பது பெரும்பாலும் காணமுடியாத ஒன்று. அப்படியே அழகுடன் விளங்கினாலும் கால வேறுபாட்டால் அவை ஒரு சமயத்துக்கு ஒரு சமயம் அழகிழத்தலும் கூடும்.

ஆனால் உறுப்புகளின் திரளிலும், தனித்தனி உறுப்புகளின் அழகிலும் எல்லாக் காலத்தும் ஒரே மாதிரியாக விளங்குவது பகவானுடைய திவ்விய மங்கள விக்கிரகமேயாகும்.

ஏனெனின், பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்தின் அழகு கன்ம பலத்தால் ஏற்பட்டதன்று. அந்த அழகு இயற்கையிலேயே அமைந்ததாகும்.

23) மென்மை - விளக்குக.

மென்மை என்பது இருவகைப்படும். அவை ஆன்ம மென்மை, விக்கிரக மென்மை என்பன. இங்குக் குறிப்பிடுவது விக்கிரக மென்மையேயாகும்.

பூவைத் தொடுவது போன்று, பிராட்டியார் பகவானின் திருவடிகளைக் கூசிப் பிடிப்பர். அத்தகைய மென்மையான திருவடிகளையுடையவர் பகவான் என்பதிலிருந்து அவனுடைய விக்கிரக மென்மை நுண்ணிதின் புலப்படும்.

அத்தகைய மென்மையான திருவடிகள்தாம் அன்று இந்த உலகத்தையும் அளந்தன.

"அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி!" என்று எம்பெருமான் திருவடிகளுக்கு மங்களாசாசனம் செய்த ஆண்டாள் திருவாக்கின் மென்மையும் அனுபவித்து இன்புறத் தக்கதே!

(தொடரும்)

# சனி பகவான்

திரு. அ. காசி - அருப்புக்கோட்டை.

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்பதற்கேற்ப அனைவரையும் ஆட்டுவிப்பவர் சிவபெருமானே ஆவார். பரமேஸ்வரனாகிய அச்சிவபெருமானின் அருள்பெற்று "ஈஸ்வரன்" என்ற பட்டத்தை பெற்றவர்கள் ஐவராவர். தம்முடைய செல்வராகிய விநாயகருக்குச் சிவனார் வழங்கிய பட்டம் விக்னேஸ்வரன் என்பதாகும். சிவகணங்களில் சிவனாரின் அணுக்கத்தொண்டராக விளங்கும் திருநந்தித்தேவருக்கு நந்தீஸ்வரர் என்ற பெயரும் உண்டு. அரக்கர்களில் அளவற்ற சிவபக்தியால் இலங்கை வேந்தனாக விளங்கிய இராவணனுக்கு "இராவணேஸ்வரன்" என்ற பெயரும் உண்டு. மானிடரும் ஈஸ்வரன் ஆகலாம் என்பதை உலகிற்கு அறிவிக்கும் பொருட்டு சிவபெருமானால் போற்றப்பெற்றவர் சண்டீஸ்வரர் ஆவார். அதே போல் கிரகங்களில் ஈஸ்வரனுடைய பட்டம் பெற்றவர் சனீஸ்வரர் ஆவார். இவர் நவக்கிரகங்களில் ஒன்ருக உயர்ந்து ஏனைய எட்டுக்கிரகங்களையும் ஆட்டி வைக்கும் ஆற்றல் பெற்றவர் ஆவார்.

சனிபகவான் தீவிரமான சிவ பக்தர் ஆவார். காசியில் சிவ லிங்கப் பிரதிஷ்டை செய்து, அதன் பயனாக கிரக பதவியையும் அதிகாரமும் பெற்ருர். எனினும் தனக்கு அருள் கொடுத்த சிவபெருமானையே பற்றித் திருவிளையாடல் செய்தவர். தனக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்றில்லாமல் சிவனையே பற்றிப் போற்றப் பெற்றவர் சனி பகவான் ஆவார்.

ஒருசமயம் சனி பகவான் சிவ பெருமானைத் தேடிக் கயிலாயம் சென்ருர். கயிலையில் சிவபெருமான் பார்வதியோடு அமர்ந்திருந்தார். தன்னைப் பற்றுவதற்காக வெகுதூரத்தில் சனி வருவதை அறிந்த சிவபெருமான், சனியின் பிடியிலிருந்து தப்பிக்க எண்ணினார். தான் செய்த முடிவை நிறைவேற்ற எண்ணிய சிவபெருமான் தேவியிடம், "நான் சிறிது காலம் தவம் செய்யப் போகிறேன்" என்று கூறிவிட்டு, அவ்விடத்தைவிட்டு அகன்ருர். பக்கத்தில் கயிலைமலையில் இருந்த ஒரு குகைக்குள் புகுந்தார். அந்தக் குகை வாசலையும் பெரிய பாறையால் நன்ருக அடைத்துவிட்டார். உள்ளே சென்ற சிவபெருமான், சனிபகவானுக்கு அஞ்சி உண்மையான நிஷ்டையில் ஆழ்ந்தார். யோக சமாதியில் ஆழ்ந்துவிட்டார். ஏழரை ஆண்டுகள் ஆன பிறகு சமாதி கலைந்து எழுந்தார். சனி பகவான் பிடியிலிருந்து தப்பிவிட்ட மகிழ்ச்சியோடு சிவபெருமான் குகையில் பாறையை விலக்கிவிட்டு வெளியே வந்தார். குகை வாசலின் வெளியே சனிபகவான் நின்று கொண்டிருப்பதைக் கண்டு சிவபெருமான் அதிர்ச்சியுற்ருர்.

வாசலில் நின்ற சனிபகவான் சிவபெருமானை நோக்கி,

"பிரபோ, என்னுடைய கடமை முடிந்தது. தங்களிடம் விடைபெற்றுக்கொள்கிறேன்" என்ருர்.

அதைக்கேட்ட சிவபெருமான், "உன்பிடியிலிருந்து தப்பிப்பதற்காகவே, குகைக்குள் சென்றேன். ஆனால் நீயோ, உன் கடமை முடிந்தது என்கிருய் எனக்கு ஒன்றும் புரியவில்லையே" என்ருர்.

சனிபகவான் புன்னகையோடு சிவபெருமானைநோக்கி, "ஐயனே! தங்களை அம்பிகையிடமிருந்து பிரித்து, இருளான இக்குகைக்குள் ஏழரை ஆண்டுகள் தங்களை அடைத்து வைத்தது அடியேன்தான் அதனால் இப்பொழுது நான் சென்று வருகிறேன். விடைகொடுங்கள்!" என்று கூறி பணிந்து நின்ருர்.

சிவபெருமான் திகைத்துப் போனார். உடனே சனி பகவானை நோக்கி, "இன்று முதல் நீ எனக்குச் சமானமே! சனீஸ்வரன் என்று உன்னை எல்லோரும் அழைப்பார்கள்!" என்று கூறி சனிபகவானை ஆசீர்வாதம் செய்தார்.

இவ்வாறு சிவபெருமானால் ஈஸ்வரன் பட்டம் பெற்ற சனீஸ்வரனின் பிறப்பு நமக்கு வியப்பினையூட்டுகிறது. சூரிய பகவானின் மனைவி சஞ்சிகை ஆவாள். பலநாள் சூரியனோடு வாழ்ந்து மூன்று பேர்களைப் பெற்றெடுத்த சஞ்சிகை சூரியனுடைய வெப்பம் பொறுக்கமாட்டாமல், தனது சாயலில் ஒரு பெண்ணைப் படைத்து, தன்னுடைய கணவனுக்குத் தெரியாமல் நீங்கினாள். சஞ்சிகையின் சாயலில் வந்த சாயாதேவிக்கும், சூரியனுக்கும் பிறந்த இரண்டாவது மகன்தான் சனி பகவான் ஆவார்.

சனிபகவான் நீல ஆடை புனைந்தவர். எட்டுக்குதிரை

பூட்டிய இரும்புத் தேரை உடையவர். மந்த நடை உடையவர். காகத்தை வாகனமாக உடையவர். கழுகும் இவருடைய வாகனமாகக் கருதப்படுகிறது. மை போன்ற கருமைநிறம் உடையவர். இவருடைய தரும பத்தினி மூதேவி ஆவாள். மேற்குத் திக்கை இடமாகக் கொண்டவர்.

சனைச்சரண் என்பதே சனி பகவானின் இயற்பெயராகும். சனை என்பதற்கு 'மெல்ல மெல்ல' என்பது பொருளாகும். சரண் என்பதற்கு 'இயங்குபவர்' என்பது பொருளாகும். எனவே ராசி மண்டலத்தில் மெதுவாக இயங்குபவர் சனிபகவான் ஆவார்.

இராசி மண்டலம் முட்டை வடிவமானது. அம்மண்டலம் 360 பாகைகளைக் கொண்டது. பாகை என்பதற்கு டிகிரி என்று பெயர். அந்த 360 பாகைகளும் 12 பாகங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு பாகமும் இராசி என்று அழைக்கப் படுகிறது. எனவே இராசிகள் 12 ஆகும். ஒவ்வொரு இராசிக்கும் ஓர் அடையாளம் உண்டு. இந்த ஒவ்வொரு இராசியையும் நவக்கிரகங்கள் கடந்து செல்லுகின்றன. சந்திரன் ஒரு ராசியைக் கடக்க இரண்டரை நாட்கள் ஆகும். சூரியன் ஒரு ராசியைக் கடக்க ஒரு மாதமாகும். ஆனால் சனி பகவான் ஒரு ராசியைக் கடக்க இரண்டரை ஆண்டுகள் ஆகின்றன. அந்த முறையில் 12 ராசிகளையும் கடந்து செல்ல சனிபகவானுக்கு 30 ஆண்டுகள் ஆகின்றன. எனவே கிரகங்களில் மெதுவாகச் செல்லக் கூடியவர் சனி பகவானே ஆவார். மெதுவாகச் சென்றாலும் உறுதியாகப் பற்றக்கூடியவர் சனி பகவானே ஆவார்.

சனி பகவான் எழுந்தருளியுள்ள ஆலயங்களில் சனிப் பெயர்ச்சி விழா நடைபெற்று வருகிறது.

ஏழரைச் சனி, அட்டமச் சனி, கண்டச் சனி - இவற்றால் பீடிக்கப்பட்டவர்கள் சனிக்கிழமை தோறும் சனீஸ்வரருக்கு அர்ச்சனை செய்தும், ஆஞ்சநேயருக்கு அர்ச்சனை செய்தும் தங்கள் துன்பங்களை நீக்கிக் கொள்ளலாம்.



## விதியின் நாயகனுக்கோர் விண்ணப்பம்

ஆளான நாள்முதலாய் இங்குத் தெய்வம்
அணுளவும் இல்லையென அறுதி யிட்டேன்!
நாளாக நாளாக நாற்ப தென்னும்
அகவையிலே என்றனுக்குக் காட்சி தந்தாய்!
தேனாக மகப்பிறவி தேர்ந்தா யென்னும்
திருக்கினையான் உணர்ந்திட்டேன் தெய்வநாதா!
தாளாமற் கெஞ்சுகிறேன் கண்ணு! என்னைத்
தண்டிக்க வேண்டுமெனிற் தடையே இல்லை!

தானாகச் சிரித்திட்டான்; தனித்த வேளை
சம்பந்த மில்லாமற் கண்ணீர் விட்டான்!
நானாகச் செய்திட்ட பிழையென் றாகில்
நட்டமெனக் கில்லாமற் பிள்ளைக் கேனோ?
ஏனமதாய்த் தோன்றியிந்த உலகைக் காத்தோய்!
இடர்விளக்கச் சித்தமெனில் எனக்கே தாராய்!
ஊனமதாய்ப் பிள்ளைக்குச் சித்தம் வைத்தாய்!
உனதாற்றல் மலையளவாம்! உன்தாள தஞ்சம்!

மறுகினிலே திரியவிட்ட மர்ம மென்ன;
வசங்கெட்டுப் பெற்றோரை வைவ தென்ன
கருவினிலே வாய்த்திட்ட குற்ற மென்றால்
விதைவிடுத்துப் பிஞ்சினையே காயப் போமோ!
திருவிருந்த மார்பழகா! சிறுவன் கோட்டம்
தீர்த்திட்டால் சீதேவி திருப்தி கொள்ளும்!
துரோணரின் உயிர்பறிக்கச் சூழ்ச்சி செய்தோய்!
தும்பைவிட்டு வால்பிடிக்கும் சூத்ர மென்னோ?

பாண்டவரைக் காப்பதற்குப் பக்கம் நின்ற
பரந்தாமா! பாண்டுவைநீ விட்டா வைத்தாய்?
கூண்டோடு கௌரவரைக் குலைத்த நாளில்
குலவேந்தன் திருதனையும் விட்டா வைத்தாய்?
வேண்டுவரம் வழங்குமெனில் விருப்பம் ஒன்று;
விடலைக்குச் சுவாதீனம் மீட்டும் தாராய்!
ஆண்டுபல வதையுற்றேன் ஆற்ற கில்லேன்
அழகனே! முகுந்தனே! ஆதி மூலா!

மூர்க்கமாய் தாக்குதற்கு மூட்டி விட்டாய்;
முறையற்ற ஏச்சுகள் மொழியச் செய்தாய்;
பாற்கடலாய்த் திகழ்ந்திட்ட உள்ளந் தன்னில்
படுநஞ்சைக் கலந்திட்ட பான்மை என்னோ?
பார்த்தனுக்குச் சாரதியாய்ப் பணிந்த மாயா!
பைந்தளிரை மரத்திற்குப் பகையேன் செய்தாய்?
ஆர்ப்பாட்டம் செய்வதெலாம் அறியேன் கண்ணு!
அடிக்கமலம் பற்றிட்டேன்! அணைப்பாய் எந்தாய்!

யசோதை மகன் அன்பில்லா அரக்கன் போல
அடியார்பால் நடந்திட்ட ஆட்சி யில்லை;
வசுதேவன் பெற்றமகன் பக்தர் பாங்கில்
வஞ்சனைகள் செய்ததாய் மரபு மில்லை;
பசுமேய்த்த பரந்தாமன் தொண்ட ருக்குப்
பாதகத்தை விளைத்திட்ட பழியுமில்லை;
விசுவாச மாய்விதேயன் வேண்டுகின்றேன்
விடலைக்குச் சுகமளிப்பாய் விதியின் வித்தே!

கவிஞர் ச. கறுப்பையா - இராமநாதபுரம்



ராஜாவின் சரித்திரத்தை தெரியாதவர்கள் இருக்கமுடியாது. அந்த மகாசாரியன் (சித்திரையின் ஆதிரைநாள்) இந்த நில உலகில் 120 வருஷங்கள் ஏள்ளி இருந்து இராமானுஜதர்சனத்தை நிலைநாட்டி பரம பதித்தார்.

'பொன்னுரைகளும் புனிதக்குரலும்' (பக்கம் 288) என்ற பகுதியிலிருந்து மேலே எழுதப்பட்டிருக்கிறது.

"தான் அற்பெய்து மாய்ந்து போகும் மேகம் இறுதியில் சில அமுதத்துளிகள் சிந்தி மறைவதுபோல் ராமானுஜர் எண்பத்திரண்டு வார்த்தைகள் அருளிச் சென்றதாய் பிரபந்நாம்ருதம் தெரிவிக்கிறது."

# ஸ்ரீராமானுஜரின் அருள்மொழிகள்

திரு. எஸ்.கே. இராமானுஜாசர்ரி - சென்னை.

[குறிப்பு: கீழே கொடுத்துள்ள முக்யமான அருள்மொழிகள் (பொன்னுரைகள்) ஸ்ரீமான் பி.ஸ்ரீஸ்வாமியின் 'ஸ்ரீராமானுஜர்' என்ற அருமையான புத்தகத்திலிருந்து ஒருசில எடுத்துத் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த புத்தகம் மிக அருமையான பொக்கிஷமாகக் கருதலாம். ஸ்வாமி இந்த புத்தகத்தை பாகவத பக்தி பெருவெள்ளத்திலே ஊறித்திளைத்து, கனிர்ந்து, கனிந்து, கற்பாரையும் கனியச் செய்யும் கனிச்சுவை மலிந்த தமிழ் நடையிலே, பாகவத பெருமையைப் பரவிப் போற்றும் வகையிலே அமைத்து தந்துள்ளார்கள். ஸ்ரீவைஷ்ணவபக்தர்கள் இப்புத்தகத்தைக் கட்டாயம் படிக்க வேண்டும். நூல்விவரம்: 'ஸ்ரீராமானுஜர்' பி.ஸ்ரீ. முல்லை நிலையம். 43, புதுத்தெரு, மண்ணடி, சென்னை-600001. விலை 42/- ரூ.]

'யோ நித்ய மச்யுத பதாம்புஜ
யுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததி
ராணித்ருணயமேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய
தயைகஸிந்தோ
ராமானுஜஸ்ய சரணௌ
சரணம் ப்ரபத்யே'

இந்த ஸ்லோகத்தை சொல்லி ராமானுஜரின் சரணங்களை சரணமடைய வேண்டும். ஏன்? எல்லா வைஷ்ணவ கோயில்களிலும் இதைத் தினந்தோறும் முறையாக பக்தர்கள் ராமானுஜார்ய திவ்யாக்ஞைப்படி அனுஸந்தித்து வருகிறார்கள். யதி

இந்த அருள்மொழிகளிலிருந்து சில முக்யமானவைகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

"பகவத் கைங்கர்யத்திலும், ஆசார்யகைங்கரியத்திலும், பாகவத கைங்கர்யத்திலும் சமபுத்தி கொள்ள வேண்டும். ஏற்றதாழ்வு கருதாமல் எந்த பாகவதனுக்கும் பணிபுரியவேண்டும்." இந்த வார்த்தையிலேயே ஸ்ரீவைஷ்ணவத்தின் அடிப்படை உண்மை ஒன்றை எவ்வளவு தெளிவாய் காண்கிறோம்.

பூர்வாசாரியர்கள் அருளிய பிரபந்தங்களில் நம்பிக்கை வைக்கவேண்டும்.

எப்போதும் இந்த்ரியங்களுக்கு வசப்பட்டு இருக்கக்கூடாது. கைங்கர்ய நெறியிலே புலனடக்கம் பெற வேண்டும் என்பது குறிப்பு.

பகவத் விஷயங்களான சாஸ்த்ரங்களில்நிலையுடையவனாக இருக்கவேண்டும்.

நாமஸங்கீர்த்தனங்களை ஸதா சொல்லிக்கொண்டிருக்க வேண்டும். (பகவானுடைய திருப்பெயர்களைக் கீர்த்தனம் செய்வதில் கிடைக்கும் சக்தியால் புலனடக்கம் பெற்று மரணத்தையும் வென்றுவிடலாம் என்று தொண்டரடிப்பொடியாழ்வார் தம் திருமாலையில் முதற் பாசுரத்தில் கூறியுள்ளார். மரண பயத்தைப் போக்கிக் கொண்டபின்பு பகவானுடைய நாம ஸங்கீர்த்தனங்களில் உண்டாகும் சுவை புலப்படும் என்ற கருத்தையும் இந்த ஆழ்வார் வாக்கில் காண்கிறோம். இந்த சுவையில் போகப் பொருள்களின் மீதுள்ள மோகத்தை மறந்து விடுவது எளிது.

நாம சங்கீர்த்தனங்கள் என்றால் பகவானுடைய நாமகீர்த்தனங்கள் மட்டுமல்ல. பாகவதர்களின் நாமகீர்த்தனங்களும் அவசியமானவை என்கிறார். பகவானுடைய நாம ஸங்கீர்த்தனங்களில் உண்டாகும் பிரியம் பாகவதர்களின்' நாமஸங்கீர்த்தனங்களிலும் இருக்கவேண்டும் என்பது இவர் வாக்கு.)

“பாகவதர்களை அடைவதே மோட்சத்திற்குக் காரணம்” என்று, அவர்கள் கட்டளையின் படி நடந்துகொள்ள வேண்டும்.

ஸ்ரீவைஷ்ணவர்களின் ஒழுக்கங்கள் மிக அவசியம். புலனடக்கம் அவசியமாயினும் அதுவே பகவானை அடைவிக்கும் என்று நினைக்கவேணடாம்” என்கிறார் ராமானுஜர். ஜைன பௌத்தங்களைப் போல் ஒழுக்க நெறியே முக்திநெறி என்று ஸ்ரீவைஷ்ணவம் கருதவில்லை. ஸ்ரீவைஷ்ணவனாக ஒழுகி அருள்நெறியே சென்று சரணாகதனாகிக் கைங்கர்ய நெறியில் நிற்பதையே வற்புறுத்துகிறார். துயிலுணர்ந்து எழும் போது குருபரம்பரையை நினைத்துக் கொள்ள வேண்டும். பகவானுடைய ஸன்னதியில் ஸ்ரீவைஷ்ணவர்கள் சேர்ந்து நிற்கும்பொழுது திருமந்த்ரத்தையோ, தவத்தையோ அனுஸந்தித்துத் தண்டனிடவேண்டும்.

பகவானுடைய விமான கோபுரங்களைக் கண்டதும் அஞ்சலி செய்யவேண்டும்.

மறந்தும் புறந்தொழா மாந்தரான வைஷ்ணவர்களின் நிலையை ராமானுஜர் சொல்கிறார்.

பாகவதர்களின் குணங்களையோ, ஆசாரியரின் குணங்களையோ, பகவானுடைய குணங்களையோ கேட்டு மகிழாது இடையே குற்றங்களை எடுத்துக்கூறுவது அபசாரம்.

ஸ்ரீவைஷ்ணவர்களின் குறைகளை மறந்து நற்குணங்களையே கொண்டாட வேண்டும்.

'நான் பாகவதனுக்கு அடியவன்' என்று கருதாது சமானன் என்று எண்ணக்கூடாது. அப்போதுதான் பரஸ்பர கைங்கர்ய நினைவில் பாகவத சமுதாய ஒழுக்கம் நிலைபெறும் என்பது குறிப்பு.

ஞானபக்தி வைராக்யம் முதலான பண்புகளை உடைய மகாத்மாக்களை சிறப்பாக நினைக்க வேண்டும். அத்தகைய பாகவதர்களிடம் குலம் குணம் முதலியவற்றை ஆலோசித்துப் பார்க்கவேகூடாது.

நாள்தோறும் ஒரு நாழிகையாவது குருவின் கல்யாண குணங்களைக் கொண்டாடவேண்டும். அதுபோல ஒரு நாழிகையாவது நம்பிக்கையுடன் திருவாய்மொழி முதலான பிரபந்தங்கள் ஓதப்படவேண்டும்.

மேலே சொன்ன மஹாசாரியரின் அமுத மொழிகளை ஸ்ரீவைஷ்ணவபக்தர்கள் பின்பற்றவேண்டும். அதனால் அவர்களுக்கு ஸகல க்ஷேமங்களும் கிடைக்கும்.

'பூமன்னுமாது பொருந்திய
மார்பன் புகழ்மலிந்த
பாமன்னுமாறனடி பணிந்-
துய்ந்தவன் பல்கலையோர்

தாம்மன்னுவந்தவிராமானுசன்
சரணாரவிந்தம்
நாம் மன்னிவாழ நெஞ்சே
சொல்லுவோமவன் நாமங்களே'

--ராமனுசநூற்றந்தாதி





# கேள்விக்கு இதோ பதில்!

(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

1. காஞ்சீபுரம் - அழகர்கோயில்.
2. உப்பிலியப்பன்கோயில்
3. ஸ்ரீமுஷ்ணம்
4. நாலாயிர திவ்ய பிரபந்தம்
5. 74 சிம்மாஸனாதிபதிகள்
6. ஸ்ரீராமானுஜர்
7. திருக்கூடலூர்
8. திருநெல்வேலி
9. நாங்குநேரி
10. மதுரை - கூடலழகர் கோவில்
11. உளுவை
12. சாளக்கிராமம்
13. பெரியாழ்வார் எடுத்து வளர்த்த ஆண்டாள்.
14. சீதையின் சோகச் சிரிப்பு
15. சென்னைக்கு அருகில் உள்ள "கோயம்பேடு"
16. கூனி - சகுனி (முன்னதில் பெண் - பின்னதில் ஆண்)
17. மானசம் - வாசிகம் - காயிகம்
18. கர்ப்பம் - முட்டை - வியர்வை - பூமி
19. உத்திரமேரூர்.
20. காணபத்யம் - சௌரம் - சாக்தம், கௌமாரம்-வைணவம் - சைவம்
21. ஏழ்மையிலும் நேர்மை - கோபத்திலும் பொறுமை - தோல்வியிலும் விடாமுயற்சி - வறுமையிலும் பரோபகாரம் - துன்பத்திலும் தைரியம் - செல்வத்திலும் எளிமை - பதவியிலும் பணிவு.
22. சுக்காங்கல் - காவி - கொம்பரக்கு - கருங்குங்கிலியம் - தேன்மெழுகுலிங்கம் - செம்பஞ்சு - வெண்ணை ஆகியவைகளின் கலவை.
23. ராஜகோபுரம் - பிரகாரம் - த்வஜஸ்தம்பம் - பலிபீடம் - வாஹன பீடம் - மஹாமண்டபம் - அர்த்தமண்டபம் - அந்தராளம் - கர்ப்பகிரஹம் ஆகிய ஒன்பதும்
24. திருவோணம் ரோஹிணி நட்சத்திரம்
25. வெல்லம் - தேன் - தயிர் - நெய் - பால் ஆகிய கலவை கொண்டு தயாரிக்கப்பட்டது.
26. நீலாம்பரி
27. ஹிந்தோளம்
28. பேச்சு - நடத்தை - செயல்
29. ப்ரியம்வதம்
30. அல்லியம் (இந்த ஆட்டம் கம்சனை வதம் செய்யும் போது ஆடியது)
31. சுருக்கி - பெருக்கி - உருக்கி என்ற மூன்று வழிகள் (தண்ணீரை சூடு செய்தும், தயிருடன் தண்ணீர் சேர்த்தும், நெய்யை உருக்கியும் சாப்பிட வேண்டும்.)
32. மாங்கல்யத்தின் சரடு ஒன்றுக்கு எட்டு இழைகள் வீதம் மூன்று சரடுகளுக்கும் 24 இழைகள் இருக்க வேண்டும். மூன்று முடிச்சுகள் போட்டு கட்ட வேண்டும்.
33. நெய், நல்லெண்ணெய், இலுப்ப எண்ணை, தேங்காய் எண்ணை, விளக்கெண்ணெய் கலந்த தீபம்.
34. திருவாரூர்.

# மனம்

திருமதி. உமா ஹரிஹரன் - ஆலப்புழா

மனிதனை இறைவன் படைக்கும் போதே மனதையும் சேர்த்து படைத்து விட்டான். அவனுக்கு ஏற்படும் இன்பம், துன்பம் எல்லாமே மனதால் தான் ஏற்படுகிறது. மனம் மனிதர்களுக்கு மட்டுமே உள்ளது. இந்த ஆறறிவு படைத்தவனை மனிதன் என்கிறோம்.

இராமரிடம் உயிரையே வைத்து இருந்தாள் கைகேயி. எவ்வளவு சீக்கிரம் அதுவும் ஒரு வேலைக்கார பெண் சொல்லால் கைகேயியை மாற்றி விட்டாள்! என் இராமன், என் குழந்தை என்று அன்புடனும், பாசத்துடனும் வளர்த்ததெல்லாம் யாரும் நினைக்கவில்லை. எல்லோர் மனதிலும் அவள் ஒரு அரக்கியாகவே காட்சியளித்தாள்.

நமக்குப் பிடித்தது இது, பிடிக்காதது இது என்று நினைவு படுத்துவது மனமே. நாம் மற்றவர்கள் படும் துன்பத்தில் பங்கு கொண்டு மனதால் கருணை புரிவோமானால் கடவுள் நமக்கு நன்மை செய்வார். மற்றவர்களுக்காக இரங்குபவர்கள் மனமே தூய்மையானது என்று தாயுமானவர் கூறுகிறார்.

எவ்வுயிருந் தன்னுயிர் போல்
எண்ணி விரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்வாய்
பராபரமே.
எவ்வுயிருந் தன்னுயிர் போல்
எண்ணுந் தபோதனர்கள்
செவ்வநியை நாடிமிகச் சிந்தை
வைப்பதெந்நாளோ

என்றார்.

வெய்யிலில் செல்லும் போது நிழல் பக்கமாக நடந்து செல்லுகிறோம், நம்மேல் வெய்யில் படாமல் இருக்க. பசி எடுத்தவுடன் சாப்பிடுகிறோம். இவையெல்லாம் மனம் செயல்பட்டால்தான் முடியும். மனம் செயல்படாதவனை பித்தன் என்கிறோம்.

நம் மனதிலே இருக்கிற தற்பெருமை, கோபம், கர்வம், இச்சை, பேராசை முதலிய கெட்ட குணங்களைத் திருத்திக் கொண்டு இறைவனை வழிபடுவதில் மனதை திருப்பிவிட வேண்டும். ஒருத்தனுக்கு மனதே நெருங்கிய சிநேகிதன். அதுவே அவனுக்கு நெருங்கிய உறவும், சத்ருவும் ஆகும். மனதை வென்றவனுக்கு அதுவே உறவாகும். வெல்ல முடியாதவனுக்கு அதுவே விரோதி.

மனம் கஷ்டப்படும் போது கோவிலுக்குச் சென்றாலோ, மகான்களை காண்பதாலோ மனசு பாரம் கொஞ்சம் குறையும். நல்ல குணம் உள்ளவர்களின் நட்பானது மனதின் குழப்பங்களைப் போக்கிப் பேச்சில் உண்மையை நிலைபெறச் செய்கிறது. பாவங்களைப் போக்கி சித்தத்தைத் தூய்மையாக்குகிறது. விருப்பம் என்பது நமது மனதுக்கு உட்பட்டது.

நம் உடம்பிலே மட்டும் வியாதி தோன்றுவதில்லை. மனதில் தோன்றிய பிறகுதான் உடலில் தோன்றுகிறது. மனம் முழுமையான நிலையில் இருக்கும் போது, தேகம் ஆரோக்கியத்துடன் இருக்கும். ஒரு விரோதியால் ஏற்படும் ஆபத்தைக் காட்டிலும் அடக்கம் இல்லாத மனிதனுடைய மனமே அவனுக்கு தீங்கு அதிகம் செய்கிறது என்பதை உணர வேண்டும். மனிதர்களுடைய மனதில் எப்பொழுதும் அன்பு என்கிற தண்ணீர் சுரந்து கொண்டே இருக்க வேண்டும். இல்லையென்றால் அவன் மனம் நீர் இல்லாச் செடி போல வாடிவிடும்.

நான் யார் என்னும் விசாரணையினாலேயே மனம் அடங்கும். சும்மா இருப்பது சிரமம். அப்படி இருப்பது மனதை மௌனத்தில் ஆழ்த்துவது. இதுவே ஞானதிருஷ்டி. அப்போது நாம் தரிசிக்கும் ஆத்ம சொரூபத்தில் நாம் லயித்து விடுவோம். மனதில் குழப்பமோ, உள்ளத்தில் பயமோ இல்லாத சிந்தனையாளனே உண்மையான பலசாலி என்கிறார் ரமணர்.

உடம்புக்கும், மனதுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஸ்தூல நிலையில் இருப்பது சரீரம். சூட்சும நிலையில் இருக்கிறது மனம். யோகாசனம் சரீர சம்பந்தமான சாதனையாகும். சரீர சம்பந்தமான மற்றொரு அங்கம் பிராணயாமமாகும். சுவாசத்தின் போக்குவரத்துக்கும் மனதுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பயம், கோபம், சந்தோஷம், துக்கம் உண்டாகும் பொழுது சுவாசம் மாறுகிறது. பிராணன் சூட்சுமமானது. மனம் அதைவிட சூட்சுமமானது.

ஸ்ரீகிருஷ்ணபகவான் கீதையில் கூறியபடி, பயிற்சியினா

லும், அமைதி நிலையினாலும் மனம் சலனமற்று ஒரே நிலையில் இருக்கும். அதற்கு தியானமும். ஜபமும் முக்கியம்.

நமக்கு வேண்டியவர்கள் நோய்வாய்ப்பட்டாலோ, துன்பப்பட்டாலோ நம்மால் தாங்கமுடிவதில்லை. இடிந்துபோய் விடுகிறோம். எதற்கும் சலனமடையாத மனமே யோகிகளின் மனம். சஞ்சலமடையாத மனதை அடைவதற்கு தியானம் செய்ய வேண்டும். மனதை தூய்மைப்படுத்த, முடிந்த போதெல்லாம் ஜபம் செய்ய வேண்டும்.

மனிதர்களோடு பிறந்த ஆசை மனதின் பரிசாகும். அது திருப்தியே அடையாது. விவேகத்தையும், வைராக்கியத்தையும் புகட்டி மனதை தெளிவடையச் செய்ய வேண்டும்.

மனமது செம்மையானால் மந்திரம்
ஜெபிக்க வேண்டா
மனமது செம்மையானால் வாயுவை
அடக்க வேண்டா
மனமது செம்மையானால் வாசியை
உயர்த்த வேண்டா
மனமது செம்மையானால் மந்திரம்
செம்மையாமே!

என்பது சிவவாக்கியர்வாக்கு. மனமே உயர்ந்த மந்திர சக்தி.

சந்தோஷம் வரும் போதும், துக்கம் வரும் போதும் மனிதனின் மனம் மாறுபடுகிறது. சந்தோஷமாக இருக்கும் போது, அவனை நாடி வருபவர்களுக்கு சந்தோஷமான பதிலே கிடைக்கும். அவன் துக்கமாக இருக்கும் போது சென்றால் நடக்க வேண்டிய காரியம் கூட நடக்காமல் போகும்.

ஒருவனை விரோதி என்று மனம் நினைத்தால், அவனை பார்க்கும் போதே வெறுப்பு மனதில் தோன்றி, முகத்தில் கோபமும், ஆத்திரமும் நம் மனதை காட்டிக் கொடுக்கும். இதே அவன் விரும்பும் ஒருவரை காணும் போது மனதில் ஏற்படும் வேறுபாட்டால், நட்புணர்வு, அன்பு, முதலியவை முகத்தில் தோன்றுகின்றன.

நல்ல மனதில் தோன்றுகிற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம். நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம் என்கிறார் காஞ்சிப் பெரியவர்.

மனம் ஓடித்திரிந்து உழலும் இயல்பு உடையதுதான். அதை அடக்க முடியவில்லையே என்று தளர்ச்சி அடையாமல் முயற்சி செய்யவேண்டும். ஆசைகள் நீர்க் குமிழிகள் போல் எப்பொழுதும் மனதில்கொப்பளித்துக் கொண்டே இருக்கும். ஆசைகளை மெல்ல மெல்ல விட வேண்டும். அப்போதுதான் மனது அமைதி அடையும். நம்முடைய மனமும் உணர்வும் ஒன்றையே குறிக்கின்றன.

மனதிலுள்ளது வாக்கிலே வரவேண்டும். மனதிலே வைராக்கியத்தை வைத்துக் கொண்டு வெளியில் சிரித்துப் பேசி, மற்றவர்களை துன்புறுத்துபவர்கள் அபாயமானவர்கள். மற்றவர்கள் துன்பப்படுவதிலே இன்பம் காணும் இவர்களிடம் அதிகம் பழக்கம் வைத்துக் கொள்ளக்கூடாது.

நமக்கு மனம் இருக்கிறது. ஆகவே மனதுக்குத் தோன்றியதை நாம் செய்கிறோம். கடவுள் நமக்கு அறிவை கொடுத்திருக்கிறார். நமக்கு மரணம் நிச்சயம் என்று தெரியும். ஆனால் அது நம்மை இப்போது அடையாது. அதற்கு ரொம்ப நாட்கள் இருக்கும் என்ற நினைப்பில் மமதையுடன் இருக்கிறோம். மனதை அடக்கும் வயதல்ல என்ற எண்ணத்தில் உடலாலும் உள்ளதாலும் இன்பத்தை அடைய பல தவறுகள் செய்கிறோம். சிறிய வயதிலே மனதை ஒருமைப்படுத்த முயலாத நம்மால் பெரியவர்கள் ஆனால் முடியுமா? இறைவனை அடைய மனதால் சிறு வயதிலிருந்தே தியானங்கள் செய்ய, கொஞ்சம் கொஞ்சமாய்ப் பழகிக் கொள்ள வேண்டும். மனம் அப்போதுதான் பக்குவப்படும். மனதை ஆத்மா ஒன்றிலேயே நிறுத்தி ஆத்ம சிந்தனம் செய்ய வேண்டும்.

சிலந்தி தனது வாய் நூலிலிருந்து வலை கட்டுகிறது. அதற்குள்ளே இருந்து அதன் இரையையும் தேடிக்கொண்டு அமைதியாக வாழ்கிறது. பட்டுப் பூச்சி தன் வாய் நூலிலிருந்தே தன்னைச் சுற்றிக் கூடு அமைத்துக் கொள்ளும். அதற்குள்ளே சிறைபட்டு உயிரையும் விடும். அதுபோல நமக்கு வாழ்வையும், அழிவையும் தருவது மனம்தான். நம் வசம் மனமிருந்தால் சிலந்தியை போல வாழலாம். மனம் விரும்பிய வசம் நாம் இருந்தால் பட்டுப் பூச்சியைப் போல அழியலாம்.

நமக்குச் சங்கடங்கள் வரும் போது நாம்தான் உலகிலே மிகவும் துரதிருஷ்டசாலி என்று மனம் நினைக்கிறது. ஆனால் எத்தனையோ பெயருக்கு நமக்குக் கிடைத்த பாக்கியம் ஒரு துளிகூட இல்லை என்பதை நினைத்து பார்க்கவேண்டும்.

அப்படி நினைக்கும்போதே நம் மனம் பாரம் குறைந்தது போல இருக்கும்.

எந்தக் காரியம் செய்யத் தொடங்கினாலும் வெற்றி பெறுவோம் என்று மனதால் நினைத்துக்கொண்டே இருக்க வேண்டும். வெற்றியின் இரகசியமே இதுதான். மனம் பல வழிகளில் செல்லும். அதை தீமையிலிருந்து அகற்றி நல்ல வழியில் செல்லவிட வேண்டும். அதற்கு வேண்டியது நல்ல அறிவு. அறிவின் உதவியால் மனதை அடக்க வேண்டும். பிரச்சனை குறைந்து மகிழ்ச்சி கிடைக்கும். பயிற்சி மூலம் மனிதன் கெட்ட மனதை நல்ல மனதாகத் திருத்தி அமைக்கிருன்.

நம் மனதில் இருக்கும் மாபெரும் பொக்கிஷம் ஆத்மாவாகும். அதை நம்மால் பார்க்கவோ, கேட்கவோ முடியாது. நம் மனச்சாட்சிதான் இதயத்தை ஆட்சி செய்யும் தெய்வவாக்கு. ஆத்ம யோகம் செய்யும் போது ஆத்மாவின் ஸ்வரூபத்தை தெளிந்த மனதோடு சிந்திக்க வேண்டும். மனம் கட்டுப்பட்டால்தான் வெளி விஷயங்களில் ஒட்டாமல் இருக்கலாம்.

நாம் செய்யும் குற்றங்களை நம் மனம் பொறுத்துக் கொள்கிறது. அதே மற்றவர்கள் செய்யும்போது மனது ஒத்துக் கொள்வதில்லை. நம் மனதைத் தூய்மை ஆக்கினால் பிறரிடம் நமக்கு உண்மையான அன்பு உண்டாகும். மனம் எப்படிப் பட்டதோ, மனிதனும் அப்படிப்பட்டவன்தான். மனசாட்சிக்குக் கட்டுப்பட்டவன் நல்லவனாகிருன் மனது ஒரு கண்ணுடி போன்றது. எந்த நிறம் கண்ணுடி போடுகிறேமோ அதே நிறத்தில் காட்சிகளை காணும். மனம் எப்படி இருக்குமோ அப்படித்தான் மனிதனும் இருப்பான். அத்புதமான இந்த மனம் என்னும் கருவியை திருத்திய மைப்பது மனிதனுடைய குறிக்கோள். தூய மனது ஆசாபாசங்களுக்கு அடிமையாகாது. விருப்பு, வெறுப்பு முதலியன அந்த மனத்திடம் இடமிருக்காது. ஸ்படிகம் போன்ற தெளிந்த நல்ல மனத்தில் சோம்பலோ, சோகமோ இல்லை. அப்படிப்பட்ட தூய மனதை உடைய கடவுளை தினமும் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

"உற்ருர் யாருளரோ உயிர்
கொண்டு போகும் பொழுது
குற்ருலத்துறை கூத்தனல்லாமல்
நமக்கு
உற்ருர் யாருளரோ"

என்று அப்பர் கூறுகிருர். நமக்கு எப்போதுமே ஆறுதலாக இருக்கும் பகவானை மனம் நினைக்க ஆரம்பித்தால் உண்மையான ஆனந்தம் கிடைக்கும்.

மனதை அடக்கி இறைவன் பால் நிறுத்தி மனசுத்தி பெற்று சுகத்தின் எல்லையான மனச் சாந்தியை பெற முயற்சி செய்ய வேண்டும்.

மனதை அமைதி படுத்த யோகாசனம் உதவுகிறது. மனம் அமைதிபட்டால் இறைவனை வணங்குவது எளிதாகிறது. மனம் என்பது கடவுள் இருக்கும் இடம். கெட்ட எண்ணங்களைப் போக்கி மனதை சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். மனம் சுத்தமாக இருந்தால் பகைவன் கூட நண்பன் ஆவான். இந்த மனதை ஒருவன் அடக்கினால அவன் உலகை அடக்கத் தகுதியானவன ஆகிறுன.

யோகிகளின மனநிலை உறுதியானது. ஆசைகளுக்கு அங்கு இடமில்லை. தனனம்பிக்கை இழப்பதில்லை. வெற்றி, தோல்வி எலலாம் அவர்களுக்கு ஒன்றே. இறைவனுடைய கருவிதான் "தான" என்று அவர்கள நினைககிருர்கள். யோகிகள் பொறுமையைப் பெற்றிருக்கிருரகள். இறைவனே அவர்களுககுத தோழர்களாகவும், உறவினர்களாகவும் தோன்றுகிருர்கள். எல்லோரையும் ஒன்ருக இவர்கள் கருதுவதால் இவர்கள் மககளின் அன்பை பெறுவதற்கு ஏறறவர்கள் ஆகிருர்கள்.

அறிவு வளர்ச்சி குறுகியிருக்கும் நேரத்தில் மனம் விரிவடையாது. குன்றியிருக்கும் நேரத்தில் போராட்டம் பெரியதாக இருக்கும். மன அறிவு வளர்ச்சி ஏற்பட, ஏற்பட விட்டுக்கொடுக்கவும், பிறரை அனுசரித்து வாழவும் மனம் இணங்குகிறது. பிரச்சனையும் குறைகிறது.

மனதை அடக்கி தியானம் செய்ய வேண்டும். இறைவனை நமஸ்காரம் செய்யும் போது நம் மனபாரம் குறையும். நம்மையே இறைவனிடம் அர்ப்பணிக்கும் போது நமக்கு ஏது குறை?

"மனத்துக்கண் மாசு இலன்
ஆதல அனைத்தறன்
ஆகுல நீரபிற"

என்கிருர் வள்ளுவர். அதாவது நல்ல மனதோடு குற்றமிலலாமல் இருத்தல் வேண்டும். அப்படிக் குற்றம் இல்லாது இருததலே அறமாகும்.

# வேதம் தமிழ் செய்த மாறன்

திரு. பஞ்சு. அரங்கநாதன் - கீழரங்கம்.

ஸ்ரீ வைஷ்ணவச் சான்றோர்களை ஆழ்வார்கள் என்றும், ஆச்சாரியர்கள் என்றும் இரண்டு வகையாகப் போற்றி வருகிறார்கள். மாறன், காரிமாறன், சடகோபன், பராங்குசன், குருகைப்பிரான், வகுளாபரணன், திருக்குருகூர்நம்பி, அருள்மாறன், தென்அரங்கன் பொன்னடி, திருநாவீறுடையபிரான், பிரபன்னஜனகூடஸ்தர், குருகையர்கோன் என்ற திருநாமங்களால் புகழப்படும் நம்மாழ்வார் அவர்கள் ஆழ்வார்கள் வரிசையிலும் ஆச்சாரியர்கள் வரிசையிலும் சிறப்பாக வைத்துப் போற்றப்படுகிறார்.

ஆச்சாரியர்களின் வரிசையில் திருமால், திருமகள், சேனை முதலிகள் மூவரும் பரமபதத்தைச் சேர்ந்தவர்கள். புவியைச் சார்ந்த ஆச்சாரியார்களின் பட்டியலில் நம்மாழ்வாரே முதல்வராக உள்ளார். அதேபோல பன்னிரு ஆழ்வார்களில் ஏனையவர்கள் இவருக்கு அவயவங்கள் (உறுப்புகள்). நம்மாழ்வாரே 'அவயவி' அதாவது உறுப்புகளை உடைய உயிர்ப்பொருள் என்பர்.

நம்மாழ்வாரின் சிறப்பை ஈன்னென்பது! இவருடைய அருட்பாசுரங்களைக் கற்கும் நல்வாய்ப்புப் பெறும் நடுநிலை உணர்வுடைய வைணவர், சைவர், பௌத்தர், சமணர், கிறித்துவர், இசுலாமியர் போன்ற எச்சமயத்தவரும் பாடலின் பொதுமை, எளிமை, இயற்கை வருணனைகள் முதலியவற்றால் பெரிதும் கவரப்பட்டு இவரை நம்அறிஞர், நம் சமயத்தவர், நம் தத்துவமூர்த்தி என்றே போற்றுவர். ஆகவே இவருக்கு 'நம்மாழ்வார்' என்பது காரணப்பெயர் ஆயிற்று.

பாண்டியநாட்டில் திருக்குருக்கூரில் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் பிரமாதி ஆண்டு வைகாசி மாதம் 12ஆம் நாள் வளர்பிறை பௌர்ணமி திதி விசாக நட்சத்திரம் கடக லக்னம் கூடிய வெள்ளிக்கிழமை அன்று சேனை முதலிகள் அம்சமாய் வேளாண் குலத்தைச் சார்ந்த காரியார், நங்கையார் இருவருக்கும் குழந்தையாக "நம்மாழ்வார்' ' அவதரித்து அருளினார். ஆனால் பிறந்த குழந்தை அழவில்லை. கண் திறக்கவில்லை. பால் குடிக்கவில்லை. ஆனால் திருமேனி மெலியவும் இல்லை. எனவே பெற்றோர் பெரிதும் மனம் வருந்தினர்.

திருக்குருகூர் திருக்கோயிலுக்குச் சென்று கிழக்கே திருமுகம் கொண்டு நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ள ஆதிப்பிரான் திருமுன் குழந்தையைக் கிடத்தி அதற்கு 'மாறன்' என்று பெயரிட்டுத் தங்கள் குறையைச் சொல்லி குழந்தைக்கு அருள்புரிய வேண்டி மன்றாடினார். அழகிய நம்பி அவர்கள் இயற்றிய குருபரம்பரை என்ற புனிதநூலில் நம்மாழ்வாரின் பெற்றோர் அடைந்த வேதனையும், வருத்தமும் கல்மனத்தையும் கரையச் செய்யும்படி செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன.

பெற்றோரின் வருத்தம் தீரவும், வேதம் தமிழ் செய்து மக்களுக்கு ஸ்ரீவைஷ்ணவப்பொருள் அறிவுறுத்தவும் திருவுள்ளம் கொண்ட ஸ்ரீமந்நாராயணன் சேனை முதலியாரை நோக்கி, 'நீர் மாறனுக்கு உண்மைப் பொருள்களை உபதேசம் செய்து மீள்க' என்று பணிக்க அவரும் அவ்வண்ணமே திருக்குருகூர் ஆலயம் சென்று குழந்தைக்கு உபதேசம் செய்தருளினார். தத்துவப் பொருள்களை ஐயம் திரிபு அற உணர்ந்த குழந்தை திருகுருகூர் ஆலயத்தில் புளியமரம் வடிவில் தோன்றிய ஆதிசேடன் திருவடிகளிலே அமர்ந்து பதினாறு ஆண்டுகள் யோகத்தில் இருந்தார்.

வடநாட்டுப் புனிதத் தலங்களான கேதாரம், அமரநாதம், பத்ரிநாதம் போன்றவற்றைப் தரிசித்து அயோத்தியை அடைந்தார், மதுரகவி அவர்கள். அப்பொழுது தென்திசையில் பேரொளி ஒன்று தோன்றவே அதனைப் பின்பற்றி வந்த மதுரகவியார் யோகத்தில் இருந்த சிறுபாலகன் முன் நின்றார். அக்குழந்தையை சோதிக்க விரும்பிய மதுரகவி "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" என்று வினவ தவயோகராஜனும், வைணவ ஆச்சாரியார்கள், ஆழ்வார்கள் வரிசையில் முதலிடம் பெற்றவரும் ஆகிய நம்மாழ்வார் என்ற அக்குழந்தை "அத்தைத் தின்று அங்கே கிடக்

கும்'' என்று திருவாய்மலர்நத ருளி மீண்டும் யோகியானார.

ஞான சூரியனாகிய நம்மாழ் வாரின் அருள் ஒளி நோக் கால் மல இருள் அகலப் பெற்ற மதுரகவி அவர் திரு வடிகளில் வீழ்ந்து உபதேசம் பெற்று மதுரகவி ஆழ்வார் ஆயினார். 'கண்ணிநுண் சிறுத் தாம்பு' என்று தொடங்கும் பதி னோறு பாடல்களை நம்மாழ் வார் மீது பாடியுளார். மது ரகவி ஆழ்வார் இறைவனைப் பாடவில்லை என்பது குறிப் பிடத்தக்கது. பின்னர் நம்மாழ் வார் ஆணைப்படி அவர் பல் வேறு திவ்ய தேசத்து எம்பெரு மான்களை பாடிய பாசுரங்களை பட்டோலையில் அலங்கரித்தார்.

நம்மாழ்வார் திருஅரங்கம், திருவேங்கடம், அயோத்தி, திரு பாற்கடல், பரமபதம் உள் ளிட்ட முப்பத்தைந்து புகழ் பெற்ற தலங்களைப் பாடியரு ளினார். நம்மாழ்வார் திருப் புளியடியில் முப்பத்தோராண்டு கள் வாழ்ந்த பின்னர் பரம பதம் அடைந்தார். இவர் அருளிய பாடல்கள் மொத்தம் 1,296 ஆகும். நூறுபாடல்களை உடைய ருக்வேத சாரமான 'திருவிருத்தம்' வைணவர்களின் தமிழ்வேதமான நாலாயிரத்திவ் யப் பிரபந்தத்துள் மூன்றுவது ஆயிரத்தில் (பாடல்கள் 2478 முதல் 2577 முடிய) வைக்கப் பட்டுள்ளது.

யஜூர் வேத் சாரமாகிய "திரு வாசிரியம்'' ஏழு பாடல்களை உடையது. இவையும் மூன்றும் ஆயிரத்தில் (பாடல்கள் 2578 முதல் 2584 முடிய) வைக்கப் பட்டுள்ளன. "பெரிய திருவந் தாதி'' அதர்வண வேத சார மாய் எண்பத்தேழு பாடல்க ளைக கொண்டு மூன்றும் ஆயி ரததில் சிறப்புற விளங்குகிறது. (பாடல்கள் 2585 முதல் 2671 முடிய).

ஆயிரதது நூற்று இரணடு (1102) பாடலகளை உடையது சாமவேதசாரமாகிய 'திருவாய் மொழி' ஆகும். இவை நான் காம் ஆயிரமாகும். (பாடல்கள் 2675 முதல் 3776 முடிய). திரு வாய்மொழி த்வய மந்திரப்பொ ருள்களையும் , அர்த்த பஞ்ச கத்தையும் விளக்கிக் கூறுகிறது என்பர் பெரியோர். திருவாய் மொழி தனிச்சிறப்புடையது. மற்ற பிரபந்தங்களைப் போல திருவாய் மொழியை வீதிகளில் சொல்லுவதில்லை. ஓரிடத்தில் அமர்ந்தே சேவிப்பது வழக்கம் ஆகும்.

வேதங்களின் சாரமாகவும், உபநிடதங்களின் பொருளாகவும் எல்லாப் பொருள்களையும் மக் களுக்கு எளிதில் வழங்குவதும் ஆகிய சிறப்புடைய நம்மாழ் வார் பாடல்களில் ஒன்றி ரண்டை மட்டும் காண்போம்.

"பக்தாம்ருதம் விஸ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீஸடகோப
வாங்மயம்
ஸஹஸ்ரஸா கோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிடவேத சாகரம்"
(ஸ்ரீமந் நாதமுனிகள்)

## கற்பார் இராமபிரானையே கற்க

கம்பர் தமிழில் ராமாயணம் பாடியது கி.பி. 1178 ஆகும். ஆனால் நீண்ட நெடுங்காலமா கவே ராமன் தமிழருக்குக் கதை வடிவில் அறிமுகமாகி தெய்வ மாக பூஜிக்கப்பட்டு வருகி றார். தமிழ் இலக்கியங்கள் சமய வேபாடு இன்றி ராமனையே போற்றுகின்றன.

"அருங்கான் அடைந்த அருந்திறல்
பிரிந்த அயோத்தி"
(சிலப்பதிகாரம் 12-63-66)

"நெடியோன் மயங்கி நிலமிசைத்-
தோன்றி"
(மணிமேகலை 17-10-14)

"ஐயிரு தலையின் அரக்கர
கோமான்"
(எட்டுத்தொகை - குறிஞ்சிக்கலி)

"கடுந்தெறல் இராமன் உடன்-
புணர் சீதை"
(புறநானூறு 378)

"தேவியை வவ்விய தென்னி-
லங்கைத் தசமாமுகன்"
(தேவாரம் 3-10-2)

இவ்வாறு எல்லா சமய நூல் களும் சிறப்பித்துப் போற் றும் ஜகம் புகழும் புண்ய கதை ஸ்ரீராமனின் கதை. தந்தை சொல்மிக்க மந்திர மில்லை என்ற வாக்கியத்திற் குப் பொருளாய் உள்ள வன் ராமன். இந்தியாவில் மட்டுமின்றி திபேத், நேபா ளம், துருக்கி, இந்தோனேசியா, ஜாவா, மலேசியா, பர்மா, கம் போடியா போன்ற பல நாடுக ளில் ராமகதை சிற்சில திரிபு களுடன் விளங்கி வருகிறது.

தத்துவக்கண்ணோட்டத்தில், ஸ்ரீராமனே பரமாத்மா, சீதாப் பிராட்டி ஜீவாத்மா, ஆஞ்சநே யரே ஞானகுரு. இராவணன் முக்குண மயம். ராமராவண யுத்தம் நன்மைக்கும் தீமைக் கும் நடக்கும் யுத்தம். தீமையே வலுவானது. ஆனாலும் நன் மையே இறுதியில் வெல்லும். ராமாயணம் கதை அன்று. ஒவ் வொரு நாளும் ஒவ்வொருவரும் மனிதனும் ராமாயணத்தை தன் போக்கில் நடத்துகிறான். ஆகவே அந்த உயர்வுடைய

ராமன் கதையே கற்க என்கிருர் நம்மாழ்வார்.

"கற்பார் இராமபிரானை அல்லால்
மற்றும் கற்பரோ?
புற்பா முதலாப்புல்லெறும்
பாதியொன்றின்றியே
நற்பால் அயோத்தியில் வாழும்
சராசரம் முற்றவும்
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்
பெற்ற நாட்டுளே"
(திருவாய்மொழி (7-5-1)

## வேங்கடவனையே பாடுக

மறந்தும் புறந்தொழா மாண்பினர் நம்மாழ்வார். செத்துப் பிறக்கின்ற சிறுதெய்வங்களை எல்லாம் விட்டுவிட்டு உலகம் யாவையும் உளவாக்கி, நிலைபெறுவித்து பின் நீக்கும் விளையாட்டு உடைய எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனைத் தவிர்த்து மற்றுமோர் தெய்வமுண்டோ? ஏக தெய்வ வழிபாட்டை உபதேசித்தால் பொது ஜனவிரோதம் ஏற்படும். ஆனாலும் ஸ்ரீவைணவத்தில் புவியைச் சார்ந்த முதல் ஆச்சாரியார் விரோதங்களைப் பற்றிக் கவலைப்படாது மக்களுக்கு உண்மைப் பொருளை உபதேசிக்கவேண்டியது கடமையல்லவா? ஆகவேதான் நம்மாழ்வார் "கலியுகத்தின் கண்கண்ட தெய்வமான ஸ்ரீவேங்கடவனையே வழிபடுங்கள். வேங்கடவன் ஒருவனே இகபர சௌபாக்யங்களையும் , பிறப்பற்ற பெருநிலையையும் பரமபதத்தையும் அருளவல்லவன் வேறு எவரையும் வணங்க வேண்டாம்" என்று உபதேசிக்கின்ருர்.

"சொன்னால் விரோதமிது, ஆகிலும்
சொல்லுவன் கேண்மினோ
என்னாவில் இன்கவி
யானொருவர்க்கும் கொடுக்கிலேன்
தென்னா, தெனாவென்று வண்டு-
முரல் திருவேங்கடத்து
என்னானை என்னப்பன்
எம்பெருமான் உளனாகவே"
(திருவாய்மொழி 3-9-1)

## நம்மாழ்வாரின் 'தலைவர்

எல்லாம் வல்ல திருமாலே பரத்துவம். எறும்பு முதல் யானை ஈருக எல்லா உயிர்களும் அவன் அடிமைகளே. ஆதி மூலமே என்றழைத்த யானை கஜேந்திர ஆழ்வார் ஆனார். பிறப்பால் வேற்றுமை இல்லை. சாதிப்பித்தும், குலப்பெருமை பேசுதலும் கூடாது. சிறந்த சமயமான ஸ்ரீவைஷ்ணவத்தை அனைவரும் ஏற்று உயர்வு அடைய வேண்டும் என்பது நம்மாழ்வார் நோக்கம். வள்ளல் ராமானுசரும் ஒதுக்கப்பட்ட மக்களை 'திருக்குலத்தார்' என்று அழைத்து ஆலயப்பிரவேசம் செய்வித்தது வரலாறும். 'ஆவுரித்துத்தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர் நம் தலைவர்' என்ருர் சைவ சமய திருநாவுக்கரசு நாயனார்.

'அவன் நான்காம் வருணத்திலும் மிகவும் இழிந்த பிறப்பினன். ஒருசிறிதும் நன்மையறியா சண்டாளனினும் மோசமான சண்டாளன். அவனுடைய அடியாரின் அடியாரே என் தலைவர்' என்கிருர் நம்மாழ்வார். ஏன்?

ஏனென்ருல் அந்த இழிந்த சண்டாளன் பகவானாகிய கண்ணனுக்கு அடிமை செய்து கொண்டு அடியவராக இருப்பதுதான் காரணம் என்கிருர். "பாகவத சேஷத்துவம்" என்கிற பரம புருஷார்த்தம் மிக உயர்வு என்று அருளிச்செய்தார் நம்மாழ்வார்.

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை
நலந்தாளிலாத சண்டாள
சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல்
மணிவண்ணற் காளென்றுள்
கலந்தார் அடியார் தம்மடியார்
எம்மடிகளே"
(பாடல் 2971) திருவாய்மொழி 3-7-9

## கண்ண உன்காட்சி தா

நம்மாழ்வாருக்கு தான் உண்ணும் சோறு, பருகும் நீர்; தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் வடிவமாகவே உள்ளது. பஞ்ச பூதங்களும் அவனையே நினைவு படுத்துகிறது. சூர்ய சந்திரர்களும் மும்மூர்த்திகளும் எல்லாம் கண்ணனே. அங்கு இங்கு என்னாத எங்கும் பிரகாசமாய் பார்க்கும் திசை தொறும் கண்ணனே. நின்றும், இருந்தும் , கிடந்தும், நடந்தும் நினைப்பது அவன் நாமமே. ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமத்தை மிகவும் பக்தி சிரத்தையாக அக்கறையுடன் தியானம் செய்யலாம். அறியாமையாலோ அல்லது வேடிக்கையாகவோ முறையில்லாமல் அவன் திருநாமத்தைச் சொன்னாலும் போதும். இறைவன் அருள் கட்டாயம் கிட்டும். இவ்வகையில் பகவானின் புகழ்பாடுதலே அவன் அருள் கிடைப்பதற்கான எளிய வழி என்று நம்மாழ்வார் நமக்கு அறிவுறுத்துகின்ருர்.



### "வேதபாட பரிரக்ஷணு" எனும் திட்டம்

வேதங்களைப் பாதுகாத்து அவற்றின் பெருமையைப் பரபபிடும் திட்டம் ஒன்று தி.தி. தேவஸ்தானத்தாரால் திருப்பதி ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மைய கட்டிட வளாகத்தில் செயற்படுத்தப்பட உள்ளது. ஐந்தாண்டுகாலத்திற்கு மேற்கொள்ளப்படும் இத்திட்டத்திற்கென ரூ. 2 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் வேதங்களை கணிப்பொறி மூலமாக ஒலிப்பதிவு, வேதங்களைப் பற்றிய ஆராய்ச்சிப் பணிகள், வேதங்களை பல்வேறு மொழிகளில் மொழியாக்கம் செய்யப்படல் போன்றன மேற்கொள்ளப்படும்.

### நினைவுநாள் விழா

பிரபல தெலுங்கு மொழிக் கவிஞரும், ஏழுமலையானின் பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக அன்னமாசார்யாவின் 491ஆவது நினைவுநாள் விழா 7-4-94 முதல 13-4-94 வரை வெகுச்சிறப்பாகத திருப்பதி **ஸ்ரீ அன்னமாசாரயா** கலாமந்திரத்தில் நடைபெற்றது. முதல்நாளன்று காலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீஅன்னமய்யாவின் திருவுருவப்படங்கள் திருப்பதி நகரத்தின் முக்கிய வீதிகளில் திருவீதி வலம் மேற்கொள்ளப் பட்டது. அன்று மாலை நடைபெற்ற தொடக்க நாள் விழா நிகழ்ச்சிகளுக்கு தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி அவர்கள் தலைமை வகிக்க, தி.தி. தேவஸ்தான பொறுப் பாண்மைக்குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்கள்

விழாவின போது திருவாளர்கள நேதுநூரி சீநிவாசுலு, டி. பசுபதி, கலஹூரி பூர்ணிகிருஷ்ணா, பி.எஸ். ரங்கநாத, ஜி. நாகேஸ்வரநாயுடு திருமதியாளர்கள **பி.ராஜேஸ்வரி** ஸ்ரீநிவாஸ், உஷா ஸ்ரீநிவாஸ், விஜயலட்சுமி சர்மா, வி. சுமித்ரா பாரததசாரதி, உளளிட்ட பல்வேறு இசைககலைஞரகள் பங்கேற்ற பாட்டுககச்சேரிகளும், நாட்டியம் நிகழ்ச்சிகளும் இனிது நடைபெற்றன. மேலும் அன்னமய்யா பாடல்கள் பற்றிய இலக்கிய, இசைச் சொற்பொழிவுகளும் இந்நாட்களின் போது நடைபெற்றன.

* * *

> **அறிவிப்பு**
>
> சம்பந்தப்பட்ட கோயில்களின் விண்ணப்பங்களின் பேரில் தி.தி. தேவஸ்தானம் கோயில் குடைகளை சலுகை விலையில் வழங்கி வருகின்றது. இக்கோயில்கள் இந்து சமய அற நிலையத்துறையின்கீழ் பதிவு செய்யப்பட்டதாகவும், சம்பந்தப் பட்ட கோயில் செயலாட்சி தலைவர்களின் விண்ணப்பங்களின் வாயிலாகவும் அணுகுதல் வேண்டும். தற்போது இக்குடைகளின் விலை ரூ. 1000/- லிருந்து ரூ. 900/- ஆக குறைக் கப்பட்டுள்ளது. முழுத்தகவல்களுக்கு ஆங்கிலத்தில் கீழ்வரும் முகவரியுடன் தொடர்பு கொள்ளுதல் வேண்டும். "செயலாட்சித் தலைவர் (E.O.) தி.தி. தேவஸ் தானம், திருப்பதி-517501"

## செய்திச்சுருக்கம்

சிறப்பு விருந்தினராகப் பங்கேற்றார். அன்னமய்யா குடும்பத்தைச் சார்ந்தவர்களை குழுத்தலைவர் பொன்னாடைப் போர்த்திக் கௌரவித்தார். செயலாட்சித்தலைவர் தம் தலைமை உரையில் மாயவனைப் போற்றிய ஆழ்வார்தம் பாசுரங்களின் பெருமையைப் பரப்பிடும் வகையில் செயல்படும் தி.தி. தேவஸ்தானத்தாரின் ஆழ்வார் திவ்ய பிரபந்தச் செயல்திட்டத்தின் செயல்பாடுகளையும், தமிழகத்தில் இத்திட்டம் பெற்று வரும் வெற்றியினையும் குறிப்பிட்டு, இவ்வகையில் அன்னமய்ய, பாடல்களை இலக்கியம் மற்றும் இசை மூலமாகப் பரப்பவேண்டியதன் அவசியத்தையும் எடுத்துரைத்தார். ஏழுநாட்கள் நடைபெற்ற இவ்

### ஸ்ரீசூக்த யக்ஞம்

மகாராஷ்டிர மாநிலம் கோலஹாபூரிலுள்ள ஸ்ரீமகாலக்ஷ்மி திருக்கோயில் வளாகத்தில் தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் "ஸ்ரீமந்நாராயண அஷ்டாக்ஷர ஸ்ரீசூக்த அத்புத சாந்தி மகா யக்ஞம்" ஒன்று அண்மையில் நடைபெற்றது. மூலபாகல ஸ்ரீஸ்ரீஸ்ரீ விகஞானிதி சுவாமிகள் கலநது கொண்ட இவ் வேள்வி சம்பந்தமான நிகழ்ச் சிகளில் தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. ஏ. செங்கல்ரெட்டி, குழுஉறுப்பினர் திரு. என். சேஷகிரி ராவ், கொல்ஹாபூர் மகாராஜா உள்ளிட்ட பல்வேறு துறைகளைச் சார்ந்த உள்ளூர் பிரமுகர்கள் பலரும் பங்கேற்று சிறப்பித்தனர். திருமலைககோயில் தலைமை அர்ச்சகர் மேற்பாரவையின் கீழ் வைகானஸ ஆகம முறையில் ப்ருகு முனிவரின் பிரகிமாதிகாரத்தில் கூறியுள்ளபடி இந்த வேள்வி நடைபெற்றது. ஐந்து நாட்கள்

நடைபெற்ற இந்த வேள்வியை சுமார் 3.6 இலட்சம் பொதுமக்கள் கண்டு மகிழ்ந்தனர்.

சுமார் 3.5 இலட்சம் செலவில் இவ்வேள்வி நடைபெற்றது. இவ்வேள்வியின் போது வேள்விச்சாலையில் வைக்கப்பட்ட உண்டியல் மூலமாகவும், உள்ளூர் பிரமுகர்களின் நன்கொடைமூலமாகவும் சுமார் ரூ. 2.25 இலட்சம் தேவஸ்தானத்தின் வருவாயாகக் கிடைக்கப்பெற்றது. இவ்வைந்து நாட்களின் போது பக்தர்களுக்கு திருமலைக்கோயில் லட்டு, மற்றும் அன்ன பிரஸாதங்களும் இலவசமாக விநியோகிக்கப்பட்டன. மேலும் தி.தி. தேவஸ்தான இந்து தர்ம பரிஷத் மற்றும் அன்னமாசார்யா இசைத்துறை கலைஞர்கள் பங்கேற்ற பல்வேறு சமய, இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

* * *

திருமலையில் காகுல கொண்டா எனும் இடத்தில் மின் உற்பத்தி செய்யும் வகையில் ரூ. 8 கோடி செலவில் நவீன காற்றாலைகள் நிறுவப்படும்.

* * *

தி.தி. தேவஸ்தான மேற்கொண்டுள்ள திருமலை காடு மேம்பாட்டுத் திட்டம் மேலும் மூன்று நாட்களுக்கு நீடிக்கப்பட்டுள்ளது.

சமையல் கூடம் உள்ளிட்ட திருமலைக்கோயில் வளாகப்பகுதிகளை ரசாயன முறையில் பழுதுபார்க்கும் பணியை தில்லியைச் சார்ந்த பிர்லா புதைபொருள் மற்றும் பண்பாட்டு மையத்திடம் தி.தி. தேவஸ்தானம் ஒப்படைத்துள்ளது.

* * *

ஆந்திர மாநிலத்திற்கு வெளியே பணிபுரியும் தி.தி. தேவஸ்தான ஊழியர்களுக்கு அவர்களது மாத அடிப்படை ஊதியத்தில் 20 சதவிகிதம் ஊக்கத்தொகையாக அளிக்கப்படும்

* * *

## 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களுக்கு வசதிகள்

* 'க்யூ' கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் காத்திருக்கும் நேரத்தை கணிசமாகக் குறைக்கும் வகையில், தினசரி சேவை நேரங்களில் பல மாற்றங்களை தி.தி தேவஸ்தானம் செய்துள்ளது. அதே சமயத்தில் கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களுக்கு வெகுநேரம் காத்திருக்குபடியான ஒரு களைப்பு சூழ்நிலையை நீக்கும் வகையில் கீழ்வரும் வசதிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.
* மிகவும் விசாலமான சுகாதாரமான, காற்றோட்டமான பெரிய கொட்டகைகளில் மின் விசிறிகள் பொருத்தப்பட்டுள்ளன.
* காஃபிபோர்டு நிறுவனத்தாரால் உள்ளே உணவு வகைகள் விற்பனை.
* நியாயமான விலையில் உணவுப் பொட்டலங்கள் விற்பனை.
* ஆந்திரமாநில பால்வள நிறுவனத்தாரின் சுத்தமான பால்விற்பனை.
* தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட தெய்வ வண்ண உருவப்படங்கள், மற்றும் நூல் வெளியீடுகள் விற்பனை.
* 'க்யூ' வரிசைகளிலும் மறைப்பிட வசதிகள்.
* வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் ஒலிபரப்பப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்.
* பக்தி நிகழ்ச்சிகள், இசை போன்றன ஒலிபரப்பப்படல்.
* 'க்யூ' கொட்டகைகளின் வாயில் அருகேயே 'காலணிகளை' வைப்பதற்கான வசதிகள்.
* தலாளிகள் மற்றும் ஏமாற்றுப் பேர்வழிகளின் தவறான வழிகளைத் தடுப்பதற்கும், புகார்களை ஏற்று உதவி செய்யவும் கோயில் வாயிலருகே (முகத்துவாரம்) அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.
* 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களின் தேவைகளையும், வசதிகளையும் கவனிக்க அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.



Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

